உ

திருச்சிற்றம்பலம்.

# தேவார வைப்புத் தலங்கள்







ஆசிரியர் :

"தொண்டர் சீர் பரவுவார்"

சைவத்திரு. இரா. ப. தங்கவேலனார்,

ஈரோடு.



வெளியீடு :

மாநில திருமுறை மாநாடு,

தொண்டர்சீர் பரவுவார் பவள விழாக்குழு,

ஈரோடு.

# அணிந்துரை :-

மு. அ. முருகேசன், பி. ஏ., பி. எல்.,
(மதுரை மாவட்ட முன்னாள் நீதிபதி)
மதுரை.

நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித்திரிந்து சிவபெருமானென்று
பாடுமின்! பாடிப் பணிமின்! பணிந்தபின்
கூடிய நெஞ்சக் கோயிலாக் கொள்வனே — திருமந்திரம்

சைவ சமயக் குரவர்களுள் தேவாரம் பாடிய சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரால் வழிபடப்பட்ட தலங்கள் 'பாடல் பெற்ற தலங்கள்' என்று சைவப் பெருமக்களால் போற்றப்படுகின்றன.

அந்த தலங்களுக்கும் அங்கே பாடப்பட்ட தேவாரபதிகங்களுக்கும் சைவ உலகிலே தனிப் பெருமையும் சிறப்பும் உண்டு. அத்தலங்களுக்கு வாழ்வில் ஒரு முறையேனும் சென்று வழிபட்டு வருவதை சைவர்கள் தங்கள் சமயக் கடமைகளுள் ஒன்ருகக் கருதுகின்றனர். பாடல் பெற்ற பதிகள் எவை என்பதைக் கீழ்வரும் பாடல் காட்டுகிறது.

'சோழநாட்டு ஒரு நூற்றுத் தொண்ணூற்று ஒன்று
தொல் இலங்கை இரண்டு; தமிழ்ப் பாண்டிநாட்டில்
ஏழிரண்டு; மலைநாட்டில் ஒன்று; கொங்கில்
ஏழு; நடுநாட்டில் இரு பத்திரண்டு;
ஏழு, ஐந்தோடு இருபதாம் தொண்டை நாட்டில்;
எண் ஒன்றே துளுவத்தில், வடநாட்டு ஐந்தே
ஏழு பத்தைந்துடன் இரண்டு நூறு கொண்டது
ஈசன்உறை தேவாரத் திருத்தலங்கள்'

இத்தலங்களுக்குப் போய் வழிபட்டு வந்த என் ஞானத் தந்தையார் 'தமிழ்க்கடல்' ராய. சொ. அவர்கள் 'திருத்தலப் பயணம்' என்ற ஒரு அழகிய நூலை 1966 ம் ஆண்டு வெளியிட்டார்கள். தமிழ் மீது உள்ள காதலால் அவர்கள் சைவ, வைணவ வேறுபாடுகளை மனதிற் கொள்ளாமல் ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட திருப்பதிகளையும் தம் பயணத்தில் சேர்த்துக்கொண்டு, தம்முடைய நூலிலும் சேர்த்துக் கொண்டார்கள். அதன்பிறகு அப்படிப்பட்ட ஒரு நூல் வெளிவரவில்லை.

தமக்கெனத் தனிப்பதிகங்களைப் பெருமல் பாடல் பெற்ற தலங்களிலும் பொதுப் பதிகங்களிலும் பெயரளவில் குறித்துப் போற்றப் பட்ட தலங்களும் உண்டு. அவைகள் ''தேவார வைப்புத் தலங்கள்'' என்று சைவப் பெருமக்களால் போற்றப்படுகின்றன. அத்தலங்களைப் பற்றிய நூல் இது. கால வெள்ளத்தாலும் இயற்கையின் சீற்றத் தாலும் ஊர்களும் நகரங்களும் அழிந்தும் மாறுபட்டும் உருக்குலைந் தும் போய் இருக்கின்றன. பாடல் பெற்ற தலங்கள் பல இந்த விபத்துக்கு ஆளாகி இருக்கின்றன. இந்த நிலையில், அத்தலங்களை எல்லாம் கண்டுபிடித்து அவைகளைப் பற்றிய குறிப்புகள் எழுதுவது என்பது யாவர்க்கும் எளிது அல்ல. அது ஆராய்ச்சியாளர்களுடைய எல்லைக்குட்பட்டது. பாடல் பெற்ற தலங்களையாவது அடையாளம் காண ஓரளவு போதிய குறிப்புகள் இருக்கின்றன. ஆனல் வைப்புத் தலங்களை அப்படி அடையாளம் காணக் கிடைக்கும் குறிப்புகள் மிகக் குறைவு. கிடைக்கும் குறிப்புகளைக் கொண்டு வைப்புத் தலங்களை முறைப்படுத்தும் முதல் முயற்சி, ஆன்ற தமிழ்ப்புலவர் சைவப் பெரு மகனர் தி. ந. **வெள்ளை வாரணம்** அவர்களால் மேற்கொள்ளப்பட்டது அதற்கு அடுத்த முயற்சி இது.

இந்த அரிய முயற்சியைச் சைவமும் தமிழும் தம்முடைய இரு கண்கள் என்று போற்றி வரும் தொண்டர்சீர் பரவுவார் ஐயா அவர் -கள் மேற்கொண்டு இருக்கிறார்கள். இந்தத் தள்ளாத வயதில் அவர்கள் இந்த முயற்சியை மேற்கொண்டதற்கு காரணம் சைவத்தின் பால் அவர்களுக்கு உள்ள காதலே! அவர்களுடைய இந்த முயற்சியை எண்ணிப்பார்க்கும் பொழுது மறைந்துபோன சங்க இலக்கியங்களைச் செல்லரித்துப்போன ஓலைச் சுவடிகளில் இருந்து அச்சுக்குக் கொண்டு வந்த டாக்டர். ஐயர். (உ. வே. சாமிநாத ஐயர்) அவர்களுடைய அரிய முயற்சியும் தொண்டும் தான் என் நினைவிற்கு வருகின்றன.

இந்த முயற்சிக்குச் சைவ உலகம் ஐயா அவர்களுக்குப் பெரிதும் நன்றிக்கடன் பட்டு இருக்கிறது. தேவார வைப்புத் தலங்களுக்குப் போகும் வழிகளும் அங்கே எழுந்தருளி இருக்கும் இறைவன், இறைவி திருநாமங்களும் அவைகளுக்குரிய பாசுரங்களும் இந்த நூலில் தெளி வாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. சைவப் பெரு மக்களுக்கு பயன் உள்ள நூல். இதற்காக **ஐயா** அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அவர்களுடைய பவள **விழா** நாளில் இந்நூல் வெளிவருவது சாலப் பொருந்தும்.

வளர்க அவர்கள் தொண்டு!

**ம. அ. முருகேசன்,**
மதுரை.

# வைப்புத்தலங்களின் முதற்குறிப்பகராதி

அச்சிட்டோர் :
ரவிபிரகாஷ் பிரிண்டர்ஸ், ஈரோடு-4.

# தேவார வைப்புத்தலங்கள்

மூவர் தேவாரப் பதிகங்களிலும் தமக்கெனத் தனித் திருப்பதி-கங்களைப் பெருமல் பிற தலப்பதிகங்களிலும் பொதுப் பதிகங்களிலும் பெயரளவில் குறித்துப் போற்றப் பெற்ற தலங்கள் ''**தேவார வைப்-புத்தலங்கள்**'' என வழங்கப் பெறுகின்றன.

இத்தலங்களுள் பலவற்றின் நாடு முதலியன நன்கு புலப்பட வில்லை. தெரிந்தவற்றுக்குரிய குறிப்புகளே அண்ணமலைப் பல்கலைக் கழக வெளியீட்டு நூலில் பேராசிரியர், வித்துவான் க. வெள்ளை வாரணர் பன்னிரு திருமுறை வரலாற்றின் முதல் பகுதியில் ''**தேவார வைப்புத்தலங்கள்**'' என்ற தலைப்பில் தந்துள்ளார். அக் குறிப்பை துணைக் கொண்டு மேற்கண்ட தலங்களை நேரில் கண்டு வழிபட்டு இக்குறிப்புகள் தரப்படுகின்றன. ஈண்டு ச, அ, சு என்ற எழுத்துக்கள் முறையே சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிய தேவாரப்பதிகங்களைக் குறிப்பனவாகும். எண்களில் முதல் எண் திருமுறை எண்ணையும், இரண்டாம் எண் பதிக எண்ணையும், மூன்றாவது பாடல் எண்ணையும் குறிப்பனவாம்.

1. **அக்கீச்சுரம் :** அ. 6, 71, 8,

இறைவன்: **அக்கினீஸ்வரர்**; இறைவி: **கற்பகநாயகி;**
தீர்த்தம் : **அக்னிதீர்த்தம்**

தஞ்சைமாவட்டம், கஞ்சனூரில் உள்ள சிவாலயம். **திரு அக்கீச்சுரம்** என்று சாசனத்திற்குறிக்கப் பெற்றது. 'அனலோன் போற்றும் காவலனைக் கஞ்சனூர் ஆண்ட கோவை' என்று அப்பரடிகள் போற்று வதால் '**அக்கீச்சுரம்**' என்னும் பெயர்க்குக்காரணம் நன்கு விளங்கும் அனல், அக்கி, தீ, நெருப்பு முதலிய சொற்கள் ஒரு பொருளை உடையவை.

திருச்சிற்றம்பலம்.

'நாடகமாடிட நந்திகேச்சுரம் மாகாளேச்
சுரம் நாகேச்சுரம் நாகளேச்சுரம் நன்கான
கோடீச்சுரம் கொண்டீச்சுரம் திண்டீச்சுரம்
குக்குடேச்சுரம் அக்கீச்சுரம் கூறுங்கால்
ஆடகேச்சுரம் அகத்தீச்சுரம் அயனீச்சுரம்
அத்தீச்சுரம் சித்தீச்சுரம் அந்தண் கானல்
ஈடுதிரையிராமேச்சுரம் என்றென்று ஏத்தி
இறைவன்உறை சுரம்பலவும் இயம்பு வோமே,

திருச்சிற்றம்பலம்.

மேற்கண்ட குறிப்புகள் திரு. **க. வெள்ளை வாரணம்** அவர்கள் (கொடுத்தது.)

2. **அரிச்சந்திரம்**:- 6, 51, 10-அ.

இறைவன் : **சந்திர மௌலீஸ்வரர்**, இறைவி : **சவுந்தரவல்லி**

சோழ நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு அருகில் '**சத்தி முற்றம்**' என்னும்பாடல் பெற்ற தலத்திற்கு $\frac{1}{2}$ மைல் தூரத்தில் உள்ளது. கோயில் சிறியது; புதுப்பிக்கப்பட்டுள்ளது.

திருச்சிற்றம்பலம.

**அரிச்சந்திரத்து** உள்ளார் அம்பர் உள்ளார்
அரிபிரமர் இந்திரர்க்கும் அரிய ரானார்.
**புரிச்சந்தி ரத்துள்ளார்**: போகத் துள்ளார்
பொருப்பரையன் மகளோடு விருப்ப ராகி,
**எரிச்சந்தி** வேட்கும் இடத்தார் ஏம
கூடத்தரர் பாடத்தேன் இசையார் கீதர்
விரிச் சங்கை எரி கொண்டங் காடும் வேடர்
வீழிமிழலையே மேவி னாரே.

திருச்சிற்றம்பலம்.

இக்கோயிலின் முன்புள்ள குளத்தைப் '**பாற்குளம்**' என்று அப்பர் குறிப்பிடுகின்றார்.

3. **அளப்பூர்**: அ. சு. 6. 51. 3; 6. 70. 4; 6. 71. 4; 7. 47. 4.

சோழ நாட்டில் மாயவரம் தரங்கம்பாடி புகைவண்டி இருப்புப் பாதையில் தரங்கம்பாடி ரயில் நிலயத்திற்கு அருகில் உள்ளது.

கோயில், கடலோரத்தில் கடல் அலை மோதும் அளவில் உள்ளது. கோயிலின் சிலபகுதி சக்கிப் போய் உள்ளது. கோயிலை வேறு இடத்தில் எடுத்துக் கட்டும் முயற்சி உள்ளது.

திருச்சிற்றம்பலம்.

ஆரூர் அத்தா ஐயாற் றமுதே **அளப்பூர்** அம்மானே
காரூர் பொழில்கள் புடைசூழ் புறவில் கருகா வூரானே
பேரூர் உறைவாய் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே
பாரூர் பலரும் பரவப் படுவாய் பாசூர் **அம்மானே**.

— (சுந்தரர்)

4. **அசோகந்தி:** அயோகந்தி அ. 6. 70. 9; 6. 7. 10.

இறைவன் : அயவந்தீசுவரர்: இறைவி : மலர்க்கண்ணம்மை

சோழ நாட்டில், திருச்சாத்த மங்கையில் திரு நீலநக்க நாயனரால் வழிபாடு செய்யப்பெற்ற 'அய வந்தி' என்னும் பாடல் பெற்ற தலமாகக் கருதுதல் பொருந்தும்.
(திரு. க. வெள்ளை வாரணம் அவர்கள் தந்த குறிப்பு)

திண்டீச்சுரம் சேய்ஞலூர் செம்பொன் பள்ளி
தேவூர் சிரபுரம் சிற்றேமம் சேறை
கொண்டீச்சரம் கூந்தலூர் கூழையூர் கூடல்
குருகாவூர் வெள்ளடை குமரி கொங்கு
அண்டர் தொழும் அதிகை வீரட் டானம்
ஐயாறு **'அசோகந்தி'** ஆமாத் தூரும்
கண்டியூர் வீரட்டம் கருகா வூரும்
கயிலாய நாதனையே காண லாமே.

சிந்தும் புனற்கெடில வீரட்டமும்
திருவாஞ் சியமும் திருநள் ளாறும்
அந்தண் பொழில் புடைசூழ் **'அயோகந்தியும்'**.
ஆக்கூரும் ஆவூரும் ஆன்பட்டியும்
எந்தம் பெருமாற் கிடமாவ தாம்
இடைச் சுரமும் எந்தை தலைச்சங்காடும்
கந்தம் கமழும் கர வீரமும்
கடம்பூர்க் கரக்கோயில் காப்புக்களே.

5. **ஆழியூர்:** அ. சு, 6. 70 7/7. 12. 7.

கீழ் வேளூருக்கும் சிக்கலுக்கும் இடையில் உள்ளது ஊர்; கிராமம்: சிறிய கோயில்: பழமையான நிலை.

விழிமிழலை வெண்காடு வேங்கூர்
வேதிகுடி விசயமங்கை வியலூர்
ஆழி அகத்தியான் பள்ளி அண்ணா
மலை ஆலங்காடும் அரதைப் பெரும்

பாழி பழனம் பனந்தாள் பாதாளம்
பராய்த்துறை பைஞ்ஞீலி பனங்காட்டூர்தண்
காழி கடல்நாகைக் காரோ ணத்தும்
கயிலாய நாதனையே காண லாமே.

(அப்பர்)

ஈழ நாட்டு மாதோட்டம் தென்னாட்டு இராமேச்சுரம்
சோழ நாட்டுத் துருத்தி நெய்த்தானம் திருமலை
ஆழியூரன நாட்டுக்கெல்லாம் அணியாகிய
கீழையில் அரனார்க் கிடம்கிள்ளி குடியதே
(சுந்தரர்)

6. **ஆறை மேற்றளி:** சு; 7. 35. 1.

இறைவன் : கைலாசநாதர், இறைவி : சபளநாயகி.

சுவாமிமலை ரயில் நிலையத்திற்குத் தெற்கே ஒரு மைல் தொலைவில் திருமேற்றளி என்ற பெயருடன் உள்ளது.

காமதேனுவின் புதல்விகளுள் பட்டி பூசித்தது பட்டீச்சுரம்; விமலி பூசித்தது - பழையாறை வடதளி; சபளி பூசித்தது திருமேற்றளி. நந்திநி பூசித்தது குழையூர்.

திருச்சிற்றம்பலம்.

அங்கம் ஓதியோர் **ஆறை மேற்றளி**
நின்றும் போந்து வந்து இன்னம்பர்த்
தாங்கி னோமையும் இன்ன தென்றிலர்
ஈசனார் எழு நெஞ்சமே
கங்குல் ஏமங்கள் கொண்டு தேவர்கள் ஏத்தி
வானவர் தாந்தொழும்
பொங்குமால் விடை ஏறி செல்வப்
புறம்பயம் தொழப் போதுமே.

7. **பழையாறை**

இறைவன் : சோமேஸ்வரர். இறைவி : சோமகலாநாயகி

தீர்த்தம் : சோம தீர்த்தம்.

ஆறை — ச. 2. 39. 5.

பழையாறை வடதளிக்கு அப்பர் பாடல் உண்டு. 5 . 58

இது பழையாறை என்றும் வடதளி என்றும் இரண்டு தலங்களாக உள்ளது. கும்பகோணம் வட்டத்தில் பட்டீச்சுரத்தில் இருந்து கிழக்கே $\frac{1}{2}$ மைல் சென்றால் வடதளி என்னும் தலத்தை அடையலாம். வடதளியில் சுவாமி பெயர் தர்மபுரீஸ்வரர் தேவியார் விமலநாயகி, கோயில் சிறு **கட்டுமலையின்** மேலுள்ளது.

இத்தலத்திற்கு அருகே $\frac{1}{2}$ மைல் தொலைவில் பழையாறை உளது.

சோழர்களின் பழமையான தலைநகரம் பழையாறை. சந்திரன் பூசித்தது; அமர்நீதி நாயனார் வாழ்ந்த பதி; வடதளிக்கு அருகில் சிவப்பிரகாச சுவாமிகளுடைய சமாதிக்கோயில் உள்ளது.

ஆறைவட மாகறல் அம்பர் ஐயாறணியார்
பெருவேளூர் விளமர் தெங்கூர்
சேறை துலை புகலூர் அகலாதிவை
காதலித் தானவன் சேர்பதியே.

(ஞானசம்பந்தர்)

8. **ஆடகேச்சுரம் :** அப்பர் 6. 71. 8.

திருவாரூர் பூங்கோயிலுக்குள் உள்ள **நாகப்பிலம்** என வழங்கும் ஆலயம் என்பார் ரா. பி, சேதுப்பிள்ளை. இது ஆரூர் பெரிய கோயில் வெளிப் பிரகாரத்தின் முற்றத்தில் தனிக் கோயிலாக உள்ளது. மூர்த்தி ஒன்றும் இல்லை. கீழே செல்லும் ஒரு சுரங்க வாயிலை பலகைக் கல்போட்டு மூடி உள்ளார்கள். அந்த நாகப்பிலத் தினுள் புகுந்து பலர் சுவர்க்கம் புகுகின்றார் என்று மூடப்பட்டதாகத் தல வரலாறு கூறுகிறது.

நாடகமாடிட நந்திகேச் சுரம் மாகா ளேச்
சுரம் நாகேச்சுரம் நாகளேச்சரம் நன் காண
கோடீச்சுரம் கொண்டீச்சுரம் திண்டீச்சுரம்
குக்குடேச்சுரம் அக்கீச்சுரம் கூறுங்கால்
ஆடகேச்சுரம் அகத்தீச்சுரம் அயனீச்சுரம்
அத்தீச்சுரம் சித்தீச்சுரம் அந்தண்கானல்
ஈடுதிரையிரா மேச்சுரம் என்றென்று ஏத்தி
இறைவனுறை சுரம்பலவும் இயம்பு வோமே

9. இடைக்குளம் : அ. 6. 71. 10.

சுவாமி பெயர் : **ஐராவதேஸ்வரர்—அபிராமநாயகி**

மருத்துவக்குடி என இந்நாளில் வழங்குகின்றது. ஆடுதுறை புகைவண்டி நிலையத்திற்கு அண்மையில் உள்ளது.

'உய்யக் கொண்டார் வளநாட்டு திருவிடைக்குளம் உடை-யாள்' என்பது கல்வெட்டுக் குறிப்பு.

ஐராவதம் வழிபட்ட சிற்பம் ஒன்று கோயில் முன்னால் உள்ளது. பெரிய சிவாலயம். இராசகோபுரம் உள்ளது. திருப்பணி செய்யப்பட வேண்டிய நிலையில் உள்ளது. 2 கால பூசை நடைபெறு கிறது.

கொள்ளும் இலயத்தார் கோடிகாவும்
குரங்கணின் முட்டமுங் குறும்பலாவும்
கள்ளருந்தத் தெள்ளியாருள்கி யேத்துங்
காரோணந் தம்முடைய காப்புக்களே.

திருச்சிற்றம்பலம்.

12. இடைப்பள்ளி — ச. 2. 39. 4
இத்தலம் எது என்று தெரியவில்லை.

திருஞான சம்பந்தர் க்ஷேத்திரக் கோவையில் நாலாவது பாட்டில் இத்தலத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

திருச்சிற்றயபலம்.

அறப்பள்ளி அகத்தியான்பள்ளி வெள்ளைப்
பொடிபூசி ஆறணிவானமர் காட்டுப்பள்ளி
சிறப்பள்ளி சிராப்பள்ளி செம்பொன்பள்ளி
திருநனிபள்ளி சீர் மகேந்திரத்துப்
பிறப்பில்லவன் பள்ளி வெள்ளச் சடையான்
விரும்பும் **இடைப்பள்ளி** வண் சக்கரமால்
உறைப்பால் அடிபோற்றக் கொடுத்தபள்ளி
உணராய் மடநெஞ்சமே உன்னிநின்றே

திருச்சிற்றம்பலம்.

13. **இராப்பட்டீசுரம் :** அ, 6. 25. 10.

கும்பகோணம் திருவாரூர்ப் பெருவழியில் பெருவேளூர்க்குத் தெற்கே கரவீரத்திற்கு வடக்கு முகமாக இத்தலம் அமைந்துள்ளது. பெருவேளூர் காட்டூர் ஐயன்பேட்டை என்று வழங்குகின்றது.

பெரிய சிவாலயம்; நல்ல கல் திருப்பணி; (செட்டியார்கள் திருப்பணி) தற்போது கவனிப்புப் போதாது.

திருச்சிற்றம்பலம்.

நல்லூரே நன்றாக நட்டமிட்டு
நரையேற்றைப் பழையாறே பாயஏறிப்
பல்லூரும் பலிதிரிந்து சேற்றூர்மீதே
பலர் காணத் தலையாலங் காட்டினூடே.
இல்லார்ந்த பெருவேளூர்த் தளியே பேணி
**இராப்பட்டிச்சரங்** கடந்து மணற்கால்புக்கு
எல்லாருந் தனிச் சாத்தங்குடியிற் காண
இறைப் பொழுதிற் திருவாரூர் புக்கார் தாமே.

திருச்சிற்றம்பலம்.

14. இளங்கோயில் அ. 6. 71. 5.

பழையகோயிலை புதுப்பிக்க, திருப்பணியினைத் தொடங்கு முன், நாள் வழிபாடு தடையின்றி நிகழ்தற் பொருட்டுக் கருவரையிலுள்ள பெருமானை வேறோர் இடத்தில் எழுந்தருளி இருக்கும் படி வேண்டி அமைத்துக் கொண்ட கோயில் **இளங்கோயில்** எனப்படும். இடைக் கால வழிபாட்டிற்கென அமைத்துக் கொண்ட இச்சிறிய கோவிலைப் 'பாலாலயம்' எனவும் வழங்குவர். இவ்வாறு இளங்கோயிலாக அமைக்கப்பட்ட சந்நிதிகள், தேவார ஆசிரியர்களாற் பாடப் பெற்றமையால் நிலையான தனிக்கோயிலாகவே இன்றும், காட்சி அளிக்கின்றன. மீயச்சூர் இளங்கோயில், கடம்பூர் இளங்கோயில் என்பன இவ்வகையில் குறிக்கத்தக்கன.

(அப்பர் பெருமான் காலத்தில் இருந்த பல விதமான கோயில்கள்)

திருச்சிற்றம்பலம்.

பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோடு எட்டும், மற்றும்
கரக்கோயில் கடிபொழில் சூழ்ஞாழற் கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
**இளங்கோயில்** மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்த் திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே.

திருச்சிற்றம்பலம்.

15. இளமர் அ. 6. 70. 4.

இத்தலம் இது என்று தெரியவில்லை.

திருச்சிற்றம்பலம்.

எச்சில் **இளமர்** ஏம நல்லூர்
இலம்பையங் கோட்டூர் இறையான்சேரி
அச்சிறுபாக்கம் அளப்பூர் அம்பர்
ஆவடு தண்துறை அழுந்தூர் ஆறை
கச்சினங் கற்குடிகச்சூர் ஆலக்
கோயில் கரவீரங் காட்டுப்பள்ளி
கச்சிப்பலதளியும் ஏகம்பத்தும்
கயிலாய நாதனையே காணலாமே.

திருச்சிற்றம்பலம்.

16. இறைக்காடு சு. 7. 47. 3.

'இறைக்காட்டாயே எங்கட்குன்னே' எனப் பாடங்கொண்டு, பெருமானே எங்களுக்கு உன் திருமேனி அழகினைச் சிறிதேனும் புலப்படுத்தாய் எனப் பொருள் கொள்ளுமிடத்து இறைக்காடு என ஒரு தனித் தலம் கொள்ள வேண்டியதில்லை.

வித்வான். க. வெள்ளை வாரணம் கருத்து

திருச்சிற்றம்பலம்.

நிறைக்காட்டானே நெஞ்சத்தானே நின்றி யூரானே
மிறைக் காட்டானே புனல்சேர் சடையாய் அனல்சேர் கையானே
மறைக் காட்டானே திருமாந்துறையாய் மாகோணத்தானே
**இறைக் காட்டானே** எங்கட்குன்னை எம்மான் தம்மானே(சுந்தரர்)

திருச்சிற்றம்பலம்.

17. **இரும்புதல்** அ. 6. 51. 6.

இறைவன் - திரிலோக நாதர் - திரிலோக நாயகி.

இது பாபநாசம் தாலூக்காவில் உள்ள இரும்புதல் என்னும் ஊராகும் சாலியாமங்கலம் to பாபநாசம் வழியில் இரும்புதலை என்று வழங்குகின்றது. சிறிய கோயில் நல்ல நிலையில் உள்ளது. ஒரு அம்மையார் திருப்பணி செய்துவ்ளார். பெரும்புலியூர் விரும்பினார் பெரும்பாழிய்யார் பெரும்பற்றப் புலியூர் மூலட்டனத்தார்

**'இரும்புதலார்'** இரும்பூளையுள்ளார் ஏரார்
இன்னம் பரார் ஈங்கோய் மலையார் இன்சொல்
கரும்பனையாள் உமையோடுங் கருகாவூரார்
கருப்பறியலூரார் கரவீர த்தார்
விரும்பு அமரர் இரவுபகல் பரவியேத்த
வீழிமிழலையே மேவினாரே.

திருச்சிற்றம்பலம்.

1958ல் கண்ணுசாமி என்பவரால் திருப்பணி தொடங்கி பிறகு அவர் மனைவியாரால் நிறைவு செய்யப்பட்டது. கல் தல வரிசை.

18. **இறையான் சேரி** அ. 6. 70. 4.

இறைவன் - விசுவநாதன் - விசாலாட்சி

இத்தலம் இரவான்சேரி என்று வழங்கப்படுகிறது. திருவாரூரிலிருந்து நாகப்பட்டினம் செல்லும் வழியில் 2கல் தொலைவு சென்றல் இத்தலத்தை அடையலாம். சிறிய கோயில், பழுதுபட்ட நிலையில்

உள்ளது உடனடியாகக் கவனிக்காவிட்டால் இத்நலம் இத்தலை முறையில் மறைந்துவிடும். இப்பெயரால் இன்னும் சில ஊர்கள் இருப்பதாகக் கேள்வி.

19. ஈசனூர் 7. 31. 8.

சுவாமி பெயர் : தர்மபுரி ஈஸ்வரர் - சௌந்திர நாயகி

இடம் : திருவாய்மூர் என்னும் சோழ நாட்டுத் திருத்தலத்திற்கு 4 கிலோ மைல் தூரத்தில் உள்ளது. நல்ல பாதை.

கோயிலின் நிலை : கோயிலின் பெரும் பகுதி அழிந்து விட்டது. கருவறையும், அர்த்த மண்டபமும் மட்டும் எஞ்சி உள்ளது. அம்மன், முருகன், முதலிய சுற்றுப் புறக்கோயிலில் உள்ள மூர்த்திகள், அர்த்த மண்டபத்தில் தஞ்சம் புகுந்துள்ளனர். அர்த்த மண்டபத்தில் கரையான் புற்று மண்ணைக் குவித்துள்ளது. கோயிலின் மீது மரம், செடி, கொடிகள் காடு போல் புதர் மண்டிக் கிடக்கின்றது.

உடனடியாகக் கவனிக்காவிட்டால், சில ஆண்டுகளில் இத் தலம் மறைந்து விடும் நிலையில் உள்ளது. நிர்வாகம் : தனிப்பட்ட குடும்பத்தார் பொருப்பில் உள்ளது. திருவாரூரிலிருந்து குருக்கள் வந்து ஒரு கால பூசை செய்கின்றார். கோயிலுக்குரிய குடும்பத்தார்களே கோவிலில் இருந்த எழுந்தருளும் மூர்த்திகளையும் விற்று விட்டார்கள் அந்த குடும்பம் நைந்து போய் வெளியூர் போய் விட்டார்கள்.

சுந்தரர் — திரு இடையாற்றுத் தொகை

திருச்சிற்றம்பலம்.

தேனூர் வினைதேய நின்றான் திருஆக்கூர்
பாசனூர் பரமேட்டி பவித்திர பாவ
நாசனூர் நனிபள்ளி நள்ளாற்றை யமர்ந்த
ஈசனூர் எய்தமான் இடையாறு இடைமருதே,

20. ஊற்றத்தூர் : 6. 70. 10; 6. 71. 4.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ளது, ஊட்டத்தூர் சிறிய ஊர். மிகப்பெரிய கோயில், பெரிய ராசகோபுரம் உள்ளது. ஒரு காலத்தில் பெரிய தேர் ஓடியது. தற்போது விழா நின்று பல ஆண்டுகள் ஆகிவிட்டன. 4 கால பூசை நடக்கின்றது. கவனிக்கப்படவில்லை. திருப்பணி செய்யவேண்டிய நிலையில் உள்ளது. கோயிலின் பல பகுதிகளில் புதர் மண்டிக்கிடக்கிறது.

வழி : திருவையாறு To திருமழப்பாடி To புள்ளம்பாடி To பாடலூருக்கு இடையில் உள்ளது. திருச்சியிலிருந்து அரியலூர் வரும் வழியில் பள்ளப்பாடி (பஸ்) பேருந்து வழியில் இருக்கின்றது,

இதற்கு அருகில் பட்டூர் என்று வழங்கும் திருபிடவூர் வைப்புத்தலம் உள்ளது. இத்தலத்தைப் பற்றி மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் ''ஊறை பதிற்றுப் பத்து அந்தாதி'' பாடி உள்ளார்.

அப்பர் அடைவுத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

பிறையூரும் சடைமுடி எம் பெருமானார்ஊர்
பெரும் பற்றப் புலியூரும் பேரா வூரும்
நறையூரும் நல்லூரும் நாரையூரும்
நாலூருஞ் சேற்றூரும் நாரையூரும்
உறையூரும் ஓத்தூரும் ஊற்றத்தூரும்
அளப்பூர் ஓமாம் புலியூர் ஒற்றியூரும்
துறையூரும் துவையூருந் தோமூர் தானுத்
துடையூருந் தொழஇடர்கள் தொடராவன்றே.

திருச்சிற்றம்பலம்.

21. ஏர் : அ. 6. 51. 6. / 6. 70. 3.

சுவாமி பெயர் : சங்கரநாதன் - சங்கரநாயகி.

கும்பகோணத்தை அடுத்த சுவாமி மலை என்று சிறப்புற்று விளங்கும் முருகன் தலத்திற்கு அருகில் ''ஏரகரம்'' என்னும் பெயருடன் விளங்குகிறது. சுவாமி மலையிலிருந்து 3 மைல் தூரமிருக்கும். சிறிய ஊர், கிராமம். கோயில் சுவாமி மலை தேவஸ்தானத்துடன் சேர்ந்துள்ளது. திருப்பணி நடந்துகொண்டிருக்கிறது. நாள் வழிபாடு நடந்து வருகிறது.

திருச்சிற்றம்பலம்.

பெரும் புலியூர் விரும்பினார் பெரும்பாழியயார்
பெரும் பற்றப் புலியூர்மூ லட்டானத்தார்
இரும்புதலார் இரும்பூளையுள்ளார் ''ஏரார்''
இன்னம்பரார் ஈங்கோய் மலையார் இன்சொல்
கரும்பனையாள் உமையோடுங் கருகாவூரார்
கருப்பறியலூரார் கர வீரத்தார்
விரும்பமரர் இரவுபகற் பரவியேத்த
வீழிமிழலையே மேவினாரே.

கும்பகோணத்தில் இருந்து சுவாமி மலை வரும் வழியில் 2 மைல் வந்து வடக்கே $1\frac{1}{4}$ மைல் சென்று இத்தலத்தை அடையலாம்.

22. கஞ்சாறு 6. 70. 8.

மானக் கஞ்சாற நாயனார் பிறந்தருளிய தலம். கும்பகோணம் மாயவரம் இடையில் 'ஆனதாண்டவபுரம்' என்று விளங்குகின்றது. அடியார் ஒருவருக்கு இறைவன் ஆனந்தத் தாண்டவக் காட்சி அருளியால் இப்பெயர் பெற்றது

பெரிய சிவாலயம், கோவிலுக்கு எதிரில் பெரிய திருக்குளம் நல்ல நிலை. மானக்கஞ்சாறரை ஆட் கொள்ள வந்த மாவிரதியார் கோலத்தில் வந்த இறைவன் திருவுருவம் தனிச் சிறப்புடையது. தனது மகள் கூந்தலை அறுத்துக் கொடுக்கும் நிலையில் மானக் கஞ்சாரர் திருவுருவம். அவர் மகள் உருவமும் உள்ளது.

உஞ்சேனை மாகாளம் ஊறல் ஓத்தூர்
உருத்திரகோடி மறைக் காட் டுள்ளும்
மஞ்சார் பொதியின்மலை தஞ்சை வழுவூர்
வீரட்டம் மாதானங் கேதா ரத்தும்
வெஞ்சமாக்கூடல் மீயச்சூர் வைகா
வேதீச்சுரம் விவீச்சுரம் வெற்றியூரும்
கஞ்சனூர் **கஞ்சாறு** பஞ்சாக் கையுங்
கயிலாய நாதனையே காணலாமே.

23. **கடம்பை இளங்கோயில்** அ, 6. 70. 5.

இத்தலம் 'மேலக் கடம்பூர்' என்னும் காட்டு மன்னார்குடிக்கு அருகில் உள்ள அப்பரால் பாடப்பெற்ற திருத்தலத்திற்கு அருகில் கூப்பிடு தூரத்தில் உள்ளது. இடிந்து தகர்ந்து வழிபாடு இன்றிக் கிடக்கிறது. அந்தோ பரிதாபம்.

திருச்சிற்றம்பலம்.

கொடுங்கோளூர் அஞ்சைக்களம் செங்குன்றூர்
கொங்கணம் குன்றியூர் குரக்குக்காவும்
நெடுங்களம் நன்னிலம் நெல்லிக்காவும்
நின்றியூர் நீடூர் நியமநல்லூர்
இடும்பாவனம் எழுமூர் ஏழூர் தோழூர்
எறும்பியூர் ஏராரும் ஏம கூடம்
கடம்பை இளங்கோயில் தன்னின்உள்ளும்
கயிலாய நாதனையே காணலாமே.

24. கடங்களூர் : சு. 7. 31. 3.

இத்தலம் எதுவென்று தெரியவில்லை.

கடங்களூர் திருக்காரிகரை கயிலாயம்
விடங்களூர் திருவெண்ணி அண்ணாமலை வெய்ய
படங்களூர்கின்ற பாம்பரையான் பரஞ்சோதி
இடங்கொள் ஊர் எய்தமான் இடையாறு இடைமருதே

திருச்சிற்றம்பலம்.

25. கருந்திட்டைக்குடி : அ. 6. 71. 3.
சுவாமி பெயர் : வசிஸ்டேஸ்டேசுவரர் - பெரியநாயகி.

தஞ்சாவூரை அடுத்துள்ளது. கருதிட்டாங்குடி என்று வழங்குகின்றது. நல்ல நிலை. 4 காலம் பூசை நடக்கின்றது.

மூழ்கினோர் கருங்குட்டம் தீர்க்கும் திருக்குளம் கோயிலுக்கு அருகில் உள்ளது. வன்னி தலமரம். நல்ல கருங்கல் திருப்பணி. கரிகாற்சோழன் திருப்பணி.

நற்கொடிமேல் விடைஉயர்ந்த நம்பன் செம்பங்
குடிநல்லக் குடி நனி நாட்டியத்தான் குடி
கற்குடி தென்களக்குடி செங்காட்டங்குடி
கருந்திட்டைக்குடி கடையக்குடி காணுங்கால்
விற்குடி வேள்விக்குடி நல்வேட்டக்குடி
வேதிகுடி மாணிகுடி விடைவாய்க்குடி
புற்குடிமா குடிதேவன்குடி நீலக்குடி
புதுக்குடியும் போற்ற இடர்போகும் அன்றே!

26. கருப்பூர் : சு. 7. 98. 3.
சுவாமி பெயர்

இடம் : கும்பகோணத்திலிருந்து அணைக்கரைக்குச் செல்லும் சென்னை வழியில் 2 மைல் தூரத்தில் உள்ளது. கொர நாட்டுக் கருப்பூர் என்று வழங்குகின்றது.

5 நிலைகளை உடைய பெரிய ராச கோபுரம் உள்ளது. பெரிய சிவாலயம். கல் திருப்பணி. கருப்பூர், திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், சுவாமிமலை இவ்வைந்து பஞ்ச குரோசதலம் என்பர்

குரோசம் = $2\frac{1}{4}$ மைல்

சுந்தரர் — திருநன்னிலத்துப் பெருங்கோயில் பதிகம்.

கச்சியன் இன்கருப்பூர் விருப்பன் கருதிக்கசிவார்
உச்சியன் பிச்சையுண்ணி உலகங்கள் எல்லாமுடையான்
நொச்சியம் பச்சிலையான் நுரைதீர் புனலால் தொழுவார்.
நச்சிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே.

27. **களந்தை** சு. 7. 39. 6.

சுவாமி பெயர், ஆதித்தேச்சுவரர் - பிரபா நாயகி

கூற்றுவ நாயனார் அவதாரதலம், சோழ நாட்டில் திருத்துறைப் பூண்டிக்கு மேற்கே 5 மைலில் உள்ள திருக்களர் என்ற பாடல் பெற்றத் தலத்திற்கு தென் மேற்கில் சுமார் 2 மைல் தூரத்தில் உள்ளது 'களப்பாள்' என்று வழங்குகின்றது. திருக்கருவூர்த் தேவரின் திருவிசைப்பா பாடல் பெற்றது.

கோயில் களந்தை ஆதித்தீச்சுரம்'

விஜயாலய சோழன்மகன் ஆதித்த சோழன் (850-890), இக் கோயிலைக் கட்டியதனால் ஆதித்தேச்சுரம். (ஆதித்த+ஈச்சுரம்)

திருத்தொண்டத் தொகை.

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேயே சிறுத்தொண்டற்கு அடியேன்
கார்கொண்ட கொடைக் கழறிற்றறி வார்க்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் '**களந்தைக்**' கோன் அடியேன்
ஆரூரன் ஆருரில் அம்மானுக் காளே.

கருவூர்த்தேவர் திருவிசைப்பா

பழையராம் தொண்டர்க்கு எளியரே மிண்டர்க்கு
அரியரே பாவியேன் செய்யும்
பிழையெலாம் பொறுத்து என்பிணி பொறுத்து அருளாப்
பிச்சரே நச்சரா மிளிரும்
குழையராய் வந்(து)என் குடிமுழுது ஆளும்
குழகரே ஒழுகுநீர்க் கங்கை
அழகரே ஆகில் அவரிடம் ''**களந்தை**''
அணி திகழ் ஆதித்தேச் சரமே.

28. **காட்டூர் :** ச. சு. 2. 39; 7. 47. 1.

திருவாருருக்கு அருகில் உள்ளது. பெரிய சிவாலயம் கல் திருப்பணி நன்கு கண்காணிக்கப்படுகின்றது. கும்பகோணம் திருவாரூர் பெருவழியில் திருவாரூருக்கு அருகில் உள்ளது.

மாட்டூர் மடப்பாச்சிலாச் சிராமம்
மயிண்டீச்சரம் வாதலூர் வாரணாசி
காட்டூர் கடம்பூர் படம் பக்கங்கொட்டுங்
கடலொற்றியூர் மற்றுறையூர் அவையும்
கோட்டூர் திருவா மாத்தூர் கோழம்பமும்
கொடுங்கோவலூர் திருக்குணவாயிர்.

(சம்பந்தர்)

**காட்டூர்க்** கடலே கடம்பூர் மலையே
காணப் பேரூராய்
கோட்டூர்க் கொழந்தே அழுந்தூர் அரசே
கொழுநற் கொல்லேறே
பாட்டூர் பலரும் பரவப் படுவாய்
பனங் காட்டூராளே
மாட்டூர் அரவா மறவாதுன்னைப்
பாடப் பணியாயே. (சுந்தரர்)

29. **கள்ளக்குடி** சு 7. 12, 7.

கீழ் வேளூரிலிருந்து திருத்துறைபூண்டி செல்லும் பெருவழியில் கீழ் வேளூரிலிருந்து 3 மைல் தூரத்தில் உள்ள தேவூர் என்னும் பாடல் பெற்ற தலத்திற்கு தெற்கே 3 மைல் கிள்ளிக்குடி, முக்கிய பெருவழியிலிருந்து கிழக்கே 1 மைல் வண்டிப் பாதையில் சென்றால் இத்தலத்தை அடையலாம். கோயில்நிலை; சிறிய கோயில் செங்கல் திருப்பணி கோயில் மீது மரம், செடி, கொடி முளைத்து சிலநாளில் சிதைந்து விடக்கூடிய நிலையில் உள்ளது. ஒரு காலப் பூசை நடக்கிறது.

ஈழநாட்டு மாதோட்டம் தென்னாட்டு இராமேச்சுரம்
சோழநாட்டுத் துருத்தி நெய்த்தானம் திருமலை
ஆழியூரன நாட்டுக் கெல்லாம் அணியாகிய
கீழையில் அரனார்க்குஇடங் கிள்ளிகுடி யதே.

30. **கீழையில் :** சு. 7. 12, 6.

இறைவன் பெயர் : செம்மலைநாதர் - வண்டமரும் பூங்குழலாள்

நாகப்பட்டணம் வட்டத்தில் நாகையிலிருந்து திருத்துறைப்-பூண்டி வழியில் 22-வது மைலில் கீழையில் உள்ளது. வழங்கு பெயர் கீழையூர்.

திருச்சிற்றம்பலம்.

குழலை வென்றமொழி மடவாளை ஓர் கூறனும்
மழலை யேற்று மணாளன்இடம் தடமால் வரைக்
கிழவன் **கீழை** வழி பழையாறு கிழையமும்
மிழலை நாட்டு மிழலை வெண்ணிந் நாட்டுமிழலையே.

1944-ல் திருப்பணி நடந்துள்ளது. பெரிய ஆலயம். பஞ்ச பாண்டவர் காட்டில் வாழ்ந்த காலத்தில் இங்கு 5 சிவலிங்கம் நிறுவி வழிபட்டனர் என்பது தல புராணம். மூலத்தானத்தில் உள்ள மூர்த்தி அர்ச்சுனனால் நிறுவப்பட்டது என்பர்.

31. **குண்டையூர் :** சு. 7. 20. 1.

சுவாமி பெயர் : சுந்தரேஸ்வரர் - மீனாட்சி அம்மை.

சோழ நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் திருக்குவளை என்று வழங்கும் திருக்கோளிலி என்னும் பாடல் பெற்ற சிவத்தலத்திற்கு 2 பர்லாங்கு தூரத்தில் உள்ளது. சுந்தரர் மனைக்கு ஆண்டுதோறும் உணவிற்கு நெல் அளித்து வந்த குண்டையூர் கிழார் வாழ்ந்த பதி. அவர் வாழ்த்த வீடு இன்றும் உள்ளது. சுந்தரர்க்கு அளித்த நெல் மலையை பூதகணங்கள் கொண்டு செல்லுதல் விழா இன்னும் நடை பெறுகிறது. நடுத்தரக் கோயில் நல்லநிலை. தருமபுரம் ஆதீனத் திற்கு உட்பட்டது. கோயிலுக்கு முன்னால் ஆண், பெண் இரு வாகை மரங்கள் உள்ளன. (ஆத்தி மரங்கள்) திருப்பணி தொடங்கி உள்ளது.

நீள நினைந்தடியேன் உனை நித்தலும் கைதொழுவேன்
வாளன கண்மடவாள் அவள் வாடி வருந்தாமே
கோளிலி எம்பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப் பெற்றேன்
ஆளிலை எம்பெருமான் அவை அட்டித் தரப்பணியே.

(சுந்தரர்)

32. குந்தாய்க்குடி : ச. 2. 39. 10.

திரு அழுந்தூர் என்பது சோழ நாட்டுப் பாடல் பெற்ற தலம். இத்தலத்திற்கு அருகில் கும்பகோணம் செல்லும் பாதையில் 4 பர்லாங் தூரத்தில் குந்தாய்க்குடி என்னும் ஆலயம் உள்ளது. சைவப்பிள்ளைமார்கள் உள்ள ஊர். கோயில் சிறியதாயினும் நல்ல முறையில் புதுப்பித்து நன்கு கவனித்து வருகின்றனர். ஊர் சிறிய கிராமம்.

சம்பந்தர் - திருச்சேத்திரக் கோவை.

குற்றங்குடி வேதிக்குடி புனல் சூழ்
குருந்தங்குடி தேவன்குடி மருவும்
அத்தங்குடி தண்திருவண் குடியும்
அலம்புஞ் சலந்தன் சடை வைத்துகந்த
நித்தன் நிமலன் உமையோடுங் கூட
நெடுங்காலம் உறைவிடம் என்று சொல்லாப்
புத்தர் புறங்கூறிய புன் சமணர்
நெடும் பொய்களைவிட்டு நினைந்து உய்மினே.

33. குன்றியூர் : ச. அ. 2. 39. 1. / 6. 70. 5.
இறைவன் : விசுவநாதன் - விசாலாட்சி.

மன்னார்குடிக்கு அருகில் உள்ள ''குன்னியூர்'' ஆகும். என்பார் க. வெள்ளைவாரணம்.

இத்தலம் திருத்துறைப்பூண்டி To திருவாரூர் பாதையில் 10-வது மைலில் ''குன்னியூர்'' என்று வழங்கப்படுகிறது. சிறிய சிவாலயம் அழிந்த நிலையில் உள்ளது. ஊருக்குள் மற்றொரு சிவாலயம் நல்ல நிலையில் உள்ளது என்பர்.

ஆரூர் தில்லையம்பலம் வல்லம் நல்லம்
வடகச்சியும் அச்சிறு பாக்கம் நல்ல
கூரூர் குடவாயில் குடந்தை வெண்ணி
கடல்சூழ் கழிப்பாலை தென்கோடி பீடார்
நீரூர் வயல் நின்றியூர் குன்றியூரும்
குருகாவையூர் நாரையூர் நீடுகானப்
பேரூர் நன்னீள் வயல் நெய்த்தானமும்
பிதற்றாய் பிறைசூடி தன் பேரிடமே.

(சம்பந்தர்)

34. குமரிக்கொங்கு : சு. 6. 70. 9.

இறைவன் : அசலதீபேஸ்வரர் - அசலதீபேஸ்வரி.

குமரி என்பதை கன்னியாகுமரி என்றும், கொங்கு என்பதை கொங்குநாடு என்றும் பிரித்துப் பொருள் காண்கின்றனர்.

கொங்கு நாட்டில், சேலம் மாவட்டத்தில் நாமக்கல் என்ற ஊருக்குச் சில மைல் தொலைவில் ''மோகனூர்'' பழமையான ஊர். அகண்ட காவிரிக்கரையில் உள்ளது. காவிரிக்கரையில் பழமையான சிவாலயம் உள்ளது. இறைவனின் பாதத்தில் ஊறுகின்ற சிறு நீரூற்று காவிரியில் வந்து கலக்கின்றது.

இத்தலத்தில் எவ்வளவு காற்று அடித்தாலும் கருவறையில் உள்ள தீபம் அசைவதில்லை. அதனாலேயே, இறைவன் பெயர் அசலதீபேஸ்வரர் என்று பெயர் பெற்றது என்பர். இதுவே குமரிக் கொங்கு அப்பர் என்று க்ஷேத்திரக்கோவையில் குறிப்பிடும் தலம் என்பர். கி. வா. ஜ. போன்ற அறிஞர். மோகனூருக்கு அருகில் குமரி என்ற ஊர் குமரமங்கலம் என்று வழங்கப்படுகிறது.

35. கூந்தலூர் : அ. 6. 70. 9., திருப்புகழ்

இறைவன் பெயர் : ஜம்புகாரண்யேஸ்வரர் – ஆனந்தவல்லி

சோழ நாட்டில் திருநறையூர்ச் சித்தீச்சுரத்திற்கு அடுத்த பேணு பெருந்துறை என்னும் பாடல் பெற்ற தலத்திற்கு 4½ மைல் தூரத்தில் உள்ளது. சிறியஊர்., பெரியகோயில் நல்லநிலை. முருகன் கோயில் தனியாகத் தனிச்சிறப்புடன் விளங்குகிறது. அருணகிரியார் திருப்புகழ் பாடல் பெற்றது.

ஜம்பு - நரி. நரி வழிபட்டதால் இறைவன் ஜம்புகாரண்யேசு-வரர் என்ற பெயர் வந்தது என்பர். சீதை தனது கூந்தலை இந்த இடத்தில் முடிந்ததால் கூந்தலூர் என்பது புராணம். கூந்தப்பனை என்ற ஒருவகைப் பனைமரங்கள் நிறைய காட்டினிடமாக வளர்ந்த காரணத்தால் இப்பெயர் பெற்றது என்பது அறிஞர் கருத்து.

திருச்சிற்றம்பலம்.

திண்டீச்சரஞ் சேய்ஞலூர் செம்பொன் பள்ளி
தேவூர் சிரபுரஞ் சிற்றேமம் சேறை
கொண்டீச்சரங் ''கூந்தலூர்'' கூழையூர் கூடல்
குருகாவூர் வெள்ளடை குமரி கொங்கு

அண்டர் தொழும் அதிகை வீரட்டானம்
ஐயாறு அசோகந்தி ஆமாத் தூரும்
கண்டியூர் வீரட்டங் கருகா வூருங்
கயிலாய நாதனையே காண லாமே.

திருச்சிற்றம்பலம்.

திருப்புகழ்.

தரையினில் வெகுவழி சார்ந்த மூடனை
வெறியனை நிறைபொறை வேண்டிடாமத
சடலனை மகிமைகள் தாழ்ந்த வீணனை மிகுகேள்வி
தவநெறி தனைவிடு தாண்டு காலியை
யவமதி யதனில் பொலாங்கு தீமைசெய்
சமடனை வலிய அசாங்க மாகிய தமியேனை
விரைசெறி குழலியர் வீம்பு நாரியர்
மதிமுக வனிதையர் வாஞ்சை மோகியர்
விழிவலை மகளிரொ டாங்கு கூடிய வினையேனை
வெகுமலரது கொடு வேண்டி யாகிலும்
ஒருமலர் இலைகொடு மோர்ந்து யானுனை
விதமுறு பரிவொடு வீழ்ந்து தாள்தொழ அருள்வாயே
ஒருபது சிரமிசை போந்த ராவணன்
இருபது புயமுடன் ஏந்து மேதியும்
ஒருகணை தனியற வாங்கு மாயவன் மருகோனே
உனதடியவர் புகழ் ஆய்ந்த நூலினர்
அமரர்கள் முனிவர்கள் ஈந்த பாலகர்
உயர்கதி பெற அருளோங்குமா மயில் உறைவோனே
குரைகழல் பணிவொடு கூம்பிடார் பொரு
களமிசை அரமது தீர்ந்த சூரர்கள்
குலமுழு தனைவரு மாய்ந்து தூளெழ முனிவோனே
கொடுவிட மதுதனை வாங்கியே திரு
மிடறினில் இருவென ஏந்து மீசுரர்
குருபரன் எனவரு கூந்தலூர் உறை பெருமாளே
திருச்சிற்றம்பலம்.

36. **கொண்டல் :** அ. சு. 6. 51. 9; 7. 12. 2.

திருஞானசம்பந்தர் சீர்காழிப் பதிக்கு மேற்கே $3\frac{1}{2}$ கல் தொலைவில் உள்ளது. கொண்டல் நாட்டுக்குத் தலையூர் என்று குறிப்பிடுவார் சுந்தரர். நடுத்தரக் கோயில்; 1970-ல் திருப்பணி நடந்து கொண்டு இருந்தது.

## சுந்தரர் திருநாட்டுத் தொகை.

அண்டத் தண்டத்தின் அப்புறத்தாடும் அமுதனூர்
தண்டம் தோட்டம் தண்டங்குறை தண்டலை ஆலங்காடு
கண்டல் முண்டல்கள் சூழ் கழிப்பாலை கடற்கரை
கொண்டல் நாட்டுக் கொண்டல் ' குறுக்கை நாட்டுக்
குறுக்கையே.

37. கோவந்தபுத்தூர் : அ. 5. 71. 3.

திரு விசயமங்கை என்னும் பாடல் பெற்ற தலம். கோவந்த புத்தூர் ஊர் பெயர். விசயமங்கை என்பது கோயிற் பெயர். கோவிந்த புத்தூர் என்று அழைக்கப்படுகிறது.

விசயமங்கை என்ற இத்தலம் சோழ நாட்டில் கும்பகோணத் திற்கு அண்மையில் திருப்புறம் புயம் என்னும் தலத்திற்கு மேற்கே 2½ கல் அளவில் உள்ளது. சிறிய கோயிலாயினும் கல் திருப்பணி 'விசய மங்கை' என்று வழங்கப்படுகிறது. செட்டிமார் திருப்பணி; கொள்ளிடத்தின் தென் கரையில் உள்ளது.

'வேதியர் தொழுதெழும் விசய மங்கையே' என்று சம்பந்தரும், 'வெந்த நீற்றன்' விஜயப்பிரான் என்று அப்பரும் குறிப்பிடுகின்றார். பாண்டுவின் மகனாகிய விசயன் (அர்ச்சுனன்) வழிபட்டதால் விசயமங்கை என்று பெயர் பெற்றதென்று அப்பர் தேவாரத்தால் அறியலாம்.

'கொள்ளிடக்கரைக் கோவந்த புத்தூரில் வெள்விடைக் கருள் செய் விசய மங்கை' என வரும் தேவாரப்பதிகங்களாலும், கல்வெட் டாலும் கோவந்த புத்தூரில் உள்ள சிவாலயமே விசய மங்கை என்பர் ஆராய்ச்சியாளர்.

**கோவந்த புத்தூர்** விசய மங்கை என்ற தலத்திற்கு எதிரில் கொள்ளிட நதியின் வடகரையில் உள்ளது. இங்கும் பழமையான ஆலயம் உள்ளது. இரண்டும் தனித்தனி தலங்கலாக உள்ளன.

சம்பந்தப் பெருமான் கோதனம் வழிபட்டதைச் சிறப்பித்து விசய மங்கையையும் போற்றுகிறார். கோவந்தபுத்தூர் என்று குறிப்பிட வில்லை. ஆனால் அப்பர்பெருமான் தான் பாண்டுவின் மகன் விசயன் வழிபட்டதைச் சிறப்பித்துப்பாடி உள்ளார். 'கோவந்த புத்தூர், என்ற ஊரின் பெயரை குறிப்பிடுகிறார்.

அப்பர் பெருமான் அர்ச்சுனன் வழிபட்டதென்று சிறப்பித்துப் பாடியது கொள்ளிடக்கரை கோவந்த புத்தூர்.

வெள்ளிடைக் கருள் செய் விசயமங்கை என்று பாடிய திருத்தலம் கொள்ளிடத் தென் கரையில் உள்ள விசயமங்கையே ஆகும். இருவரும் பாடியது ஒரே தலமென்று கொள்ளாமல் இருவரும் பாடியவை கொள்ளிடக் கரையின் எதிர் எதிர் உள்ள இருதலங்கள் என்று கொள்வதுமிகையல்ல என்று கருதுகின்றேன். இரண்டும் இருவரால் பாடப்பட்ட தனித்தலம் என்று கொள்ளலாம்.

கொள்ளி டக்கரைக் கோவந்த புத்தூரில்
வெள்ளிடைக் கருள் செய் விசயமங்கை
உள்ளிடத் துறை கின்ற உருத்திரன்
கிள்ளிடத் தலை யற்ற தயனுக்கே.

38. **சடைமுடி :** அ. 6. 70. 3.

கோவிலடி என வழங்குகிறது திருச்சடைமுடி உடைய மகாதேவர் கோயில் திருப்பேர் நகரத்தில் அமைந்தது என்பதும் கோயில் அமைந்துள்ளஇடம் திருப்புறம் என்று வழங்கியதென்பதும், பழைய கல் வெட்டால் புலனாகும்.

இடை மருது ஈங்கோய் இராமேச்சரம்
இன்னம்பர் ஏர் இடவை ஏமப்பேறூர்
சடைமுடி சாலைக்குடி தக்களூர்
தலையாலங்காடு தலைச்சங்காடு
கொடுமுடி குற்றாலம் கொள்ளம் பூதூர்
கோத்திட்டை கோட்டாறு கோட்டுக் காடு
கடைமுடி கானூர் கடம்பந் துறை
கயிலாய நாதனையே காண லாமே.

திருச்சிற்றம்பலம்.

39. **சிவப்பள்ளி :** அ. 6. 71. 1.

இறைவன் பெயர் : கைலாசநாதர்—பார்வதி அம்மை.

இத்தலம் இப்போது திருச்சம்பள்ளி என்று வழங்கப்படுகிறது.

நன்னிலம் வட்டத்தில் திருச்செம் பொன்பள்ளி, திருநனிப்பள்ளி என்ற இருபாடல் பெற்ற தலங்களுக்கு இடையில் திருச்செம் பொன்பள்ளி என்ற தலத்திலிருந்து 5 மைல் தொலைவில் சிவப்பள்ளி என்ற ஊர் உள்ளது. கோயில் அழிந்துவிட்டது

கோயிலிருந்த இடத்தில் இப்பொழுது ஊராட்சி ஒன்றிய அலுவலகம் இருக்கிறது.

அக்கோயிலிருந்த மூர்த்திகள் யாவும் குமரக் கோயில் என்னும் முருகன் ஆலயத்தில் அதே ஊரில் வைக்கப்பட்டுள்ளது. சூலதேவர் சண்டிகேஸ்வரர் முதலிய உற்சவ மூர்த்திகள் இருப்பதால் தேர்த் திருவிழா முதலியன நடைபெற்று வந்த பெரிய சிவாலயம் சிவப் பள்ளியில் இருந்திருத்தல் வேண்டும் என்று தெரிகிறது. அந்தோ பரிதாபம் காலத்தின் கோலம்.

### அப்பர் அடைவுத் திருத்தாண்டகம்

பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன் றெய்து
புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் பொற்சக்
கரப்பள்ளி திருக்காட்டுப்பள்ளி கள்ளார்
கமழ்கொல்லி அறைப்பள்ளி கலவஞ்சாரற்
சிரப்பள்ளி சிவப்பள்ளி செம்பொன் பள்ளி
செழுநனிபள்ளி தவப்பள்ளி சீரார்
பரப்பள்ளி யென்றென்று பகர்வோர் எல்லாம்
பரலோகத் தினிதாகப் பாலிப் பாரே.

40. **சூல மங்கை :** அ 6 70. 10

பசுபதி கோயில் இரயில்வே நிலையத்திற்கு அருகில் உள்ளது. கோயில் இருக்கும் பகுதி சூலமங்கலம் என்று வழங்கப்படுகிறது. பெரிய சிவாலயம்; கல் திருப்பணி; சூலம் தாங்கிய ஒரு முனிவர் உருவம் மகாமண்டபத்தில் உள்ளது. வழிபாடு சரிவர நடந்து வருகிறது.

நறையூரிற் சித்தீச்சரம் நல்லாறு
நாரையூர் நாகளேச்சரம் நல்லூர் நல்ல
துறையூர் சோற்றுத் துறை சூலமங்கை
தோணிபுரம் துருத்தி சோமீச்சரம்
உறையூர் கடலொற்றியூர் ஊற்றத்தூர்
ஓமாம்புலியூர் ஓரேட கத்தும்
கறையூர் கரும்பறியலூர் கன்றுப் பூருங்
கயிலாய நாதனையே காணலாமே.

திருச்சிற்றம்பலம்.

41. **செம்பங்குடி :** அ. 6. 71. 3. பொது

சீர்காழி கோயிலுக்கு வடகிழக்கே 2 மைல் தொலைவில் உள்ளது சிறிய கோயில்; ஊர் சிறிய கிராமம். வழிபாடு நடந்து வருகிறது.

## அடைவுத் திருத்தாண்டகம்

நற்கொடி மேல் விடையுயர்த்த நம்பன் செம்மங்
குடிநல்லக் குடிநளிநாட் டியத்தான்குடி
கற்குடி தென்களக்குடி செங்காட்டங்குடி
கருந்திட்டைக்குடி கடையக்குடி காணுங்கால்
விற்குடி வேள்விக்குடி நல் வேட்டக்குடி
வேதிகுடி மாணிகுடி விடைவாய்க்குடி
புற்குடிமாகுடி தேவன்குடி நீலக்குடி
புதுக்குடியும் போற்றஇடர் போகும் அன்றே.

திருச்சிற்றம்பலம்.

42. **செந்துறை :**

சுவாமி பெயர் : சந்திர சேகரர் - மானேந்துவல்லி

காவிரிக்குத் தென் கரையில் சம்பந்தர் வழிபட்ட தலங்களுள் ஒன்று. திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே கரூர் திருச்சி பெருஞ்சாலையில் 7 மைல் தூரத்தில் திருப்பராய்த்துறைக்கு அருகில் உள்ளது. சம்பந்தர் பாடிய பதிகம் கிடைக்கவில்லை. பாதை ஓரத்தில் உள்ளது நடுத்தரக் கோயில்; இதற்கு அடுத்து ஆலந்துறை உள்ளது. தலமரம் பலாமரம்; பலாப்பழத்தை மக்கள் உண்பதில்லை; பூசை செய்து குரங்கு களுக்கு உணவாகப் போட்டு விடுகின்றனர். மூலத்தானத்தில் உள்ள சிவலிங்கம் முள்முள்ளாக பலாக்காய் போல் இருக்கின்றது சுயம்பு (தானகத் தோன்றிய) மூர்த்தி.

அம்மைபெயருக்கு ஏற்ப அம்மை கையில் எங்கும் இல்லாதபடி மான் இருக்கின்றது. சம்பந்தப் பெருமான் திருப்பராய்த்துறை வணங்கி விட்டு ஆலந்துறை, செந்துறை ஆகிய தலங்களை வணங்கிச் சென்றார் என்று பெரியபுராணம் கூறுகின்றது.

43. **ஆலந்துறை :** சந்த நல்லூர் என்று வழங்குகின்றது.

ஆலந்துறையீசர் - பால சௌந்திரநாயகி

வடதீர்த்தீஸ்வரர் - வடம் = ஆலமரம்

திருப்பராய்த்துறைக்கு கிழக்கில் திருச்சி செல்லும் பெருவழியில் 3 மைலில் பாதை ஓரத்தில் உள்ளது. கோயில் நல்லநிலை கலதிருப்பணி 1963ல் திருப்பணி செய்யப்பட்டது. இத்தலத்தை அடுத்துத் திருச்செந் -துறை உள்ளது. பதிகம் கிடைக்கவில்லை. வருவாய் உள்ளது. 4 கால வழிபாடு. சம்பந்தர் இந்த இரு தலங்களையும் வழிபட்டுக் கொண்டு திருகற்குடி சென்று வழிபட்டார் என்று சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் பாடியுள்ளார்.

## சம்பந்தர் புராணம்

நீடும் பராய்த்துறை நெற்றித் தனிக்கண்ணர் கோயில் நண்ணிக்
கூடும் கருத்தொடு கும்பிட்டுக் கோதில் தமிழ்ச் சொன் மாலை
பாடும் கவுணியர் கண்பனி மாரி பரந் திழியச்
சூடும் கரதலத்து அஞ்சலி கோலித் தொழுது நின்றார்.

தொழுது புறம்பணைந்து அங்குநின் றேகிச் சுரர் பணிவுற்று
எழுந்திரு ஆலந்துறை திருச்செந்துறையே முதலா
வழுவில்பல் கோயில்கள் சென்று வணங்கி மகிழ்ந்தணைவார்
செழுமலர்ச் சோலைத் திருக்கற்குடி மலை சேரவந்தார்.

(பெரியபுராணம்)

44. **சேலூர் :**

மட்டியான் திடல் என்று வழங்கப்படுகிறது.

இறைவன் பெயர் : கைலாச நாதர் நித்யகல்யாணி

திருக்கருகாவூரிலிருந்து 2 மைல் பாபநாசம் சாலியாமங்கலம் வழியில் பாபநாசத்திலிருந்து சற்று கிழக்கே உள்ள வண்டிப் பாதையில் செல்ல வேண்டும். பேருந்து செல்லும்.

ஞானசம்பந்தப் பெருமான் சேலூர் வழிபட்டதை ஞானசம்பந்தர் புராணத்தில் சேக்கிழார் பின்வருமாறு குறிப்பிட்டு உள்ளார்.

மன்னும் அக்கோயில் சேர்மான் மறிக்கையர்தம்
பொன்னடித்தலம் உறப்புரி வொடுந்தொழுது எழுந்து
இன்னிசைத் தமிழ் புனைந்து இறைவர் சேலூருடன்
பன்னுபாலைத்துறைப்பதி பணிந்து ஏகினர்.

திருச்சிற்றம்பலம்.

புராணத்தில் மட்டும் குறிப்பிடுவது புராணத்தலம் என்று போற்றுவர்.

கோயில் நிலை; கோயிலையும், முன்னால் உள்ள திருக்குளத்தையும் செட்டிமார்கள் நல்ல முறையில் சிற்பநுட்பத்துடன் திருப்பணி செய்து உள்ளனர். ஆலமர் செல்வர் (தக்ஷிணாமூர்த்தி) திருக்கோயில் சிங்கங்கள் தாங்குவது போல அமைக்கப்பட்டுள்ளது. சிங்கங்களின் வாயில் கல் உருண்டைகள் உருள்கின்றன.

**45. சோமேச்சுரம்** அ 6. 70. 10.

இறைவன் : சோமீஸ்வரர்

திருக்குடந்தையில் சோமநாதசுவாமி கோயில் சிவாலயம்; நல்ல நிலை; கல் திருப்பணி. 4 கால வழிபாடு உள்ளது.

நறையூரிற் சித்தீச்சரம் நள்ளாறு
நாரையூர் நாகேச்சரம் நல்லூர் நல்ல
துறையூர் சோற்றுத்துறை சூலமங்கை
தோணி புரம் துருத்தி சோமீச்சரம்
உறையூர் கடலொற்றியூர் ஊற்றத்தூர்
ஓமாம்புலியூர் ஓர் ஏடகத்தும்
கறையூர் கருப்பறியல் கன்றாப்பூரும்
கயிலாய நாதனையே காணலாமே.

**46. தக்களூர் :** அ. சு. 6. 21 / 6. 70 3. / 7. 12. 1.

திருநள்ளாறு என்று பாடல் பெற்ற திருத்தலத்திற்கு ஒரு மைல் தூரத்தில் உள்ளது. நடுத்தரக்கோயில் கல் திருப்பணி; கவனிப்பு இல்லை.

திரு நாட்டுத் தொகை. சுந்தரர்.

வீழக்காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
கூழைஏறு உகந் தானிடம் கொண்டதும் கோவலூர்
தாழையூர் தகடூர் தக்களூர் தருமபுரம்
வாழைகாய்க்கும் வளர் மருகல் நாட்டு மருகலே.

**47. தஞ்சை :** அ. சு. 6. 2. 1. / 7. 12. 9

மருகல் நாட்டுத் தஞ்சை. இக்காலத்தில் 'கீழைத்தஞ்சாவூர்' என்று வழங்கப்படுகிறது. ராஜ ராஜ சோழனால் எடுக்கப்பட்ட பிரகதீஸ்வரர் என்னும் பெருவுடையார் கோயில் உள்ளதும், ரயில்நிலையம் உள்ளதும் யாவர்க்கும் விளக்கமாகத் தெரியும் தஞ்சை வேறு இங்கே

குறிப்பிடும் தஞ்சை வேறு முன்னே சொன்னது தஞ்சை நாட்டுத் தஞ்சை; பின்னது மருகல் நாட்டுத் தஞ்சை இது செறுத்துணை நாயனார் அவதாரத்தலம். மேலே சொன்ன இரண்டு தஞ்சைக்கும் வேறுபாடு உணர சேக்கிழார் பெருமான் இந்நாயனார் புராணத்தில் மருகல் நாட்டுத் தஞ்சாவூர் என்பர்.

திருச்செங்காட்டங்குடி என்னும் பாடல்பெற்ற தலத்திற்கு அருகில் 3 மைல் தூரத்தில் உள்ளது இத்தலம். இதைத் தஞ்சை நகர் என்றும் தஞ்சை என்றும் கூறுவர். ஊர் கிராமம்; பழைமையான பெரிய சிவாலயம்; திருப்பணி செய்ய வேண்டிய நிலையில் உள்ளது. அறநிலைய ஆணையர் உத்தண்டராமப் பிள்ளை முயற்சியால் செறுத்துணை நாயனாருக்குச் சிறிய தனிக்கோயில் கட்டப்பட்டு உள்ளது. ஊருக்குச் செல்ல நல்லபாதையில்லை; நடைபாதை தான் உள்ளது.

## 48. தஞ்சைத்தளிக்குளம்: அ. 6. 51. 8.

அஞ்சைக் களத்துள்ளார் ஐயாற் றுள்ளார்
ஆரூரார் பேரூரார் அழுந்தூர் உள்ளார்
தஞ்சைத் தளிக்குளத்தார் தக்க ளூரார்
சாந்தை அயவந்தி தங்கி னார்தாம்
நஞ்சைத் தமக்கமு தாவுண்ட நம்பர்
நாகேச்ச ரத்துள்ளார் நாரை யூரார்
வெஞ்சொற் சமண்சிறையில் என்னை மீட்டார்
வீழி மிழலையே மேவி னாரே.

தஞ்சை பெருவுடையார் கோயிலின் அருகில் உள்ளது. அரண்மனைத் தோட்டத்தின் மத்தியில் உள்ளது சிவகங்கை குளமாகும். இக்குளத்தின் மத்தியில் ஆலயம் உள்ளது. கோயில் உள்ள குளம் ஆகையால் தளிக்குளம் என்று போற்றுவர். இக்கோயிலும், குளமும் தஞ்சையில் உள்ளதால் ''தஞ்சைத் தளிக்குளத்தார்'' என்று அப்பர் பெருமான் திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்தில் போற்றுகிறார்.

குளத்தின் மத்தியில் உள்ள திடலில் சிவலிங்கமும், அம்மை உருவமும் உள்ளது. அம்மை உருவம் பிற்காலத்தில் செய்யப்பட்டது. சிவலிங்கம் ஒன்றே பண்டைக் காலத்தது. இதுவே இதன் பழமையைக் காட்டும் இது தற்போது காட்சிப் பொருளாய்உள்ளது. கரையிலிருந்தும் தரிசிக்கலாம். இரும்புக் கயிற்றின் மூலம், தொங்கு வண்டியில் யந்திர சாதன மூலமும் இக்கோயிலுக்குச் சென்று வழி

படலாம் வெறும் காட்சிப் பொருளாய் உள்ள இப்பெருமானை வழிபடு மூர்த்தியாக்கி நித்திய வழிபாடு செய்ய ஏற்பாடு செய்யவேண்டியது இன்றியமையாத கடமையாகும்.

நிர்வாகத்தினர் இதைக் கவனிப்பார்களா? இக்குளக்கரையில் இத்திருத்தாண்டகத்தை பெரிய அளவில் எழுதி விளக்கமாக வைக்கவும் வேண்டும்.

**49. தண்டங்குறை.** சு. 7. 12. 2.

இறைவன் பெயர் : கைலாசநாதர்—சர்வலோகநாயகி.

இத்தலம் இப்போது தண்டங்கோரை என்று வழங்குகின்றது. தஞ்சை to கும்பகோணம் பாதையில் தஞ்சையிலிருந்து 8-வது மைல், பாபநாசந்திலிருந்து 9-வது மைலில் உள்ளது. முக்கிய வழியிலிருந்து சற்று விலகி பாதைக்கு மேற்கே தண்டங்கோரை உள்ளது; கிராமம். நடுத்தரக் கோயிலும், குளமும் உள்ளது. அக்ராகரத்தின் மத்தியில் கோயில் உள்ளது. திருப்பணி செய்யப்பட வேண்டிய நிலை.

(பாடல் அடுந்த தலக் குறிப்பில் உள்ளது)

**50. தண்டங்தோட்டம்.** அ. 7. 12. 2.

திருநாகேச்சுரத்திற்கு அருகில் உள்ளது. பேணு பெருந்துறையிலிருந்து 2 மைல்; பெரியகோயில்; செங்கல் திருப்பணி; பழுதுபட்ட நிலை. ஊருக்குப்புறத்தில் திறந்த வெளியில் கோயில் உள்ளது ஊர் கிராமம்; சொற்பமாகத் திருப்பணி தொடங்கப்பட்டது. நடராசமூர்த்தி திருட்டுப் போய்விட்டது. 2 காலப் பூசை நடக்கிறது.

அண்டத்து அண்டத்தின் அப்புறத்தாடும் அமுதனூர்
**தண்டங்தோட்டம்** தண்டங்குறை தண்டலை ஆலங்காடு
கண்டல் முண்டல்கள் சூழ்கழிப்பாலை கடற்கரை
கொண்டல் நாட்டுக் கொண்டல் குறுக்கை நாட்டுக்
குறுக்கையே.

**51. தவத்துறை.** அ. 6. 71. 11.

லால்குடி என்று விளக்கமாக வழங்குகின்றது. பெரிய ஊர். ''பண்டெழுவர் தவத்துறை'' என்பர் அப்பர் அடிகள். பெரிய சிவாலயம், கல் திருப்பணி; நல்ல நிலை 4 கால வழிபாடு நடைபெறுகிறது.

'சப்த ரிஷிகள்' என்று போற்றப்படுகின்ற வசிஷ்டர் முதலிய முனிவர்கள் எழுவர் வழிபட்ட தலம். முனிவர்கள் எழுவர் திருவுருவமும் கோயிலில் வைத்துப் பூஜிக்கப்படுகிறது.

திருச்சிக்கு அருகில் உள்ள லால்குடி தான் தவத்துறை என்று வழங்கப்படுகிறது.

கயிலாய மலையெடுத்தான் கரங்க ளோடு
சிரங்களுரம் நெரியக் கால்விரலாற் செற்றேன்
பயில்வாய பராய்த்துறை தென்பாலைத் துறை
**பண்டெழுவர் 'தவத்துறை'** வெண்டுறை பைம்பொழிற்
குயிலாலந்துறை சோற்றுத்துறை பூந்துறை
பெருந்துறையுங் குரங்காடு துறை யினோடு
மயிலாடுதுறை கடம்பந்துறை ஆவடு
துறை மற்றும் துறையனைத்தும் வணங்குவோமே.

## 52 தளிச்சாத்தங்குடி. அ. 6. 25. 10.

இறைவன் பெயர் : தர்மபுரீஸ்வரர்—சுவர்ணாம்பாள்.

ஊர்ப் பெயர் வடகண்டம். கோயில் இருக்கும் பகுதியே தளிச்சாத்தங்குடி என்று வழங்குகின்றது. சாஸ்தா என்னும் சாத்தன் ஆலயம் இவ்வூரில் சிறப்பு. அதுபற்றியே சாத்தங்குடி என்று பெயர் பெற்றது போலும். கும்பகோணம் to திருவாரூர்ப் பெருவழியிலேயே கோயில் உள்ளது. இத்தலத்திற்கு 2 பர்லாங்கு தூரத்தில் திருக்கண்ணமங்கை என்ற திருமால் திருத்தலம் உள்ளது. இதற்கு கிழக்கே 5 மைலில் திருவாரூர் உள்ளது. கோயில் புதுப்பிக்கப்பட்டு நல்ல நிலையில் உள்ளது. ஊர் கிராமம் (வடகண்டம்)

நல்லூரே நன்றாக நட்ட மிட்டு
நரையேற்றைப் பழையாறே பாயவேறிப்
பல்லூரும் பலிதிரிந்து சேற்றூர் மீதே
பலர் காணத் தலையாலங் காட்டி னூடே
இல்லார்ந்த பெருவேளூர்த் தளியே பேணி
இராப் பட்டீச்சரம் கடந்து மணற்கால்புக்கு
எல்லாருந் **தளிச் சாத்தங்குடியி**ற் காண
இறைப்பொழுதில் திருவாரூர் புக்கார் தாமே.

**53. திங்களூர்.** அ. சு. 6. 25. 3. / 7. 31. 6.

இறைவன் பெயர் : ஆபத்சகாயேசுவரர்.

அப்பூதி அடிகள் பிறந்தருளிய தலம். திருவையாற்றிற்கு அருகில் கும்பகோணம் செல்லும் பெருவழியில் உள்ளது. இதன் அருகில் திருப்பழனம் என்னும் பாடல்பெற்ற தலம் உள்ளது. கோயில் நடுத்தரக்கோயில்; நல்ல நிலே; 4 கால பூசை நடைபெறு கிறது. ஊரும் கோயிலும் பெருவழிக்குச் சற்றுத்தள்ளி 1 பர்லாங்கு தூரத்தில் மேற்கே உள்ளது. கோயிலேச் சுற்றி வயல்வெளி. அப்பூதி அடிகள் மரபினர் இன்னும் கோயில் அறங்காவலராக பணியாற்று கின்றனர். அப்பர் கூறிய 'ஈறில் பெரும் தண்ணீர்ப் பந்தல்' பெரு வழியில் நடைமுறையில் உள்ளது. இன்னும் தாகம் உடையோர் அத்தண்ணீர்ப்பந்தலில் தண்ணீர் குடிக்கலாம்.

திருஇடையாற்றுத் தொகை.

திங்களூர் திருவாதிரையான் பட்டினமூர்
நங்களூர் நறையூர் நனிநாலிசை நாலூர்
தங்களூர் தமிழானென்று பாவிக்கவல்ல
எங்களூர் எய்தமான் இடையாறு இடைமருதே

## நடு நாட்டுத் தலம்

**54. திண்டீச்சுரம்,** அ. 6. 7. 8; 6. 70. 9.

இறைவன் : திந்திருனீஸ்வரர்.

திண்டிவனம் என்று விளக்கமாக வழங்குகின்ற பெரிய ஊர். பெரியகோயில்; ராச கோபுரம் பழுதுபட்டு உள்ளது திருப்பணி பாதியில் நின்று உள்ளது புளியமரம், தலமரம். புளியமரத்திற்கு திண்டி என்னும் தமிழ்ச்சொல், இப்பொழுது தெலுங்கு மொழியில் திண்டா என்று வழங்கப்படுகின்றது. புளிய மரக்காட்டை திண்டி வனம் என்றனர். திண்டிமரக் காட்டில் எழுந்த பெருமானுக்கு திண்டீசன், திண்டீச்சுரர் என்று வழங்கிற்று. திண்டீச்சுரர் எழுந்தருளி இருக்கும் இடம் திண்டீச்சுரம் என்று போற்றப்பட்டது.

புளிய மரத்திற்கு திருணி என்று பெயர் மாற்றி வடமொழியில் திருனீஸ்வரர் என்று இன்று கூறுகின்றனர். இப்படித்தலப் பெயர்கள் இறைவன் பெயர்கள் வடமொழியில் மாற்றிச் சிதைந்து வழங்கும்

கொடுமை வருந்தத்தக்கது. இது போன்றுதான் மயிலாடுதுறை மயூரபுரமாக மாற்றி மாயவரமாக வழங்கப்பட்டு, தற்போது அரசு முயற்சியில் மீண்டும் மயிலாடுதுறை என்று வழங்கப்படுகிறது. இப்படி எத்தனை எத்தனையோ!

காப்புத் திருத்தாண்டகம்.

தெள்ளும்புனற் கெடில வீரட்டமும்
 திண்டீச்சரமும் திருப்புகலூர்
எள்ளும் படையான் இடைத்தானமும்
 ஏயீச்சுரமும் நல் ஏமங்கூடல்
கொள்ளும் இலயத்தார் கோடி காவுங்
 குரங்கணில் முட்டமுங் குறும்பலாவும்
கள்ளருந்தத் தெள்ளியார் உள்கியேத்துங்
 காரோணந் தம்முடைய காப்புக்களே.

## 55. திருவாதிரையான்பட்டினம் சு. 7. 31. 6.

'பட்டுக்கோட்டை வட்டத்தில் உள்ள ஊர் என்பர், என்று க. வெள்ளைவாரணம் குறிப்பிட்டுள்ளார். இந்த வட்டத்தில் அதிராமப்பட்டணம் என்ற ஊரும் சிவாலயமும் உள்ளது. ஆதிரையான் பட்டினந்தான் அதிராம பட்டினமாக திரிந்து இருக்க வேண்டும்.

அந்தக் கோயில் குருக்கள்மார்கள் 'வெற்றி வேற்கைபாடிய அதி வீரராமன்பட்டிணம் என்பது தான் அதிராமப்பட்டிணம் என்று ஆயிற்று' என்று கூறுகிறார்கள். பாண்டிய நாட்டில் கொற்கைப் பகுதியில் சிற்றரசர் ஆக வாழ்ந்த அதிவீரனுக்கும், சோழ நாட்டின் தென் கோடியில் உள்ள இந்த ஊருக்கும் எந்த விதமான சம்பந்தமும் இருக்க நியாயம் இல்லை.

சில தமிழறிஞர் கடை விளம்பரப் பலகையும், ஒரு சினிமாக் கொட்டகையும், ஆதிரையான் என்ற பெயருடன் காணப்படுகின்றன ஆதிரையான் சிவபெருமான்; அவன் திருக்கோயில் இருக்கும் பட்டிணம் திருவாதிரையான் பட்டிணம். இது திரிந்து அதிராமப் பட்டிணம் என்று ஆயிற்று என்று கொள்ளலாம்.

நடுத்தரக் கோயில்; நல்லநிலை; 4 கால வழிபாடு நடைபெறுகின்றது. ஆண்டுக்கு 87 ஆயிரம் வருவாய் உள்ளது.

பாடல், பக்கம் 29ல் தலம் 54 குறிப்பில் காண்க.

**56.** துடையூர். அ. 6. 71. 4.

நாமக்கல் - திருச்சிராப்பள்ளி பாதையில் உள்ள திருப்பாச்சிலாச்சரத்திலிருந்து 3 மைல் தூரத்தில் துடையூர் உள்ளது.

(திருப்பாச்சிலாச்சரம்-திருவாசி என்று வழங்கப்படுகிறது.)

சிறியகோயில் ஒருகால்வாயின் அருகில் உள்ளது. திருப்பணி செய்யவேண்டிய நிலையில் பரிதாபமாக உள்ளது. கவனிப்பில்லை. பெயரளவில் பூசை நடக்கிறது.

அடைவுத்திருத்தாண்டகம்.

பிறையூருஞ் சடை முடியெம் பெருமான் ஆரூர்
பெரும்பற்றப் புலியூரும் பேரா வூரும்
நறையுரும் நல்லூரும் நல்லாற் றூரும்
நாலூரும் சேற்றூரும் நாரை யூரும்
உறையூரும் ஒத்தூரும் ஊற்றத் தூரும்
அளப்பூர் ஓமாம் புலியூர் ஒற்றி யூரும்
துறையூருந் துவையூருந் தோழூர் தானும்
**துடையூரும்** தொழவிடர்கள் தொடரா அன்றே.

**57.** **தேனூர்** ச. அ 1. 61, 9, ; 6. 41, 9.

திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ளது. திருச்சியிலிருந்து துறையூர் செல்லும் வழியில் 18-வது மைலில் உள்ளது (இடையில் மணச்சநல்லூர் எதுமலைகளத்தூர் வழி) கோயில் வாசலில் பஸ் நிற்கிறது.

4 கால பூசை நடைபெறுகிறது. பெரிய கோயில்; புறமதிலும் ராச கோபுரமும் சிதைந்த நிலை. வெளிப்பிரகாரம் வலம் வர முடியாதபடி கல்லும் முள்ளும் உள்ளன. துறையூர் ஜமீன்தார்களால் செய்யப்பட்ட பழைய கல் திருப்பணி. அவர்கள் உருவங்கள் தூணில் உள்ளன.

**58.** **நல்லக்குடி** அ. 6. 71. 3.

இறைவன்; ஆலந்துரையப்பர்-குயிலாண்டநாயகி

தலம் இப்போது நல்லத்துக்குடி என்று வழங்கப்படுகிறது. இது குயிலாலந்துறை என்பது ரா. ப. சேதுப்பிள்ளை கருத்து. மயிலாடுதுறைக்கு அருகில் உள்ளது. சிறிய சுதைக் கோயில் கவனிப்பில்லை. மயிலாடுதுறையில் இருந்து குருக்கள் வந்து பூசைசெய்கிறார். மயிலாடுதுறை ரயில் நிலையத்திற்கு அருகில் உள்ளது.

அடைவுத்திருத்தாண்டகம்-3.

13-ஆம் பக்கத்தில் 25-வது தலக் குறிப்பில் காண்க.

**59. நாகளேச்சுரம்** அ. 6. 71. 8

சீர்காழிப்பகுதியில் பெரிய சட்டை நாதர் கோயிலுக்குத் தென்மேற்கு மூலையில் நாகளேச்சுரம் என்னும் இத்தலம் உள்ளது. பெரிய கோயில்; ராச கோபுரம் உள்ளது. வழிபாடு நடந்து வருகின்றது. கவனிப்புப் போதாது. கோயில் தூய்மையாக இல்லை. திருப்பணி செய்யப்படவேண்டிய நிலை.

அடைவுத்திருத்தாண்டகம்-8.

5-ஆம் பக்கத்தில் 8-வது தலக்குறிப்பில் காண்க.

**60. நாங்கூர்:** 7. 1. 24 / 7. 47. 6.

இறைவன் பெயர்; மதங்கீஸ்வரர் - மையாடுங்கண்ணி.

சீர்காழிக்கு அருகில் உள்ளது. சீர்காழியிலிருந்து 5 மைல் தொலைவில் தரங்கம்பாடி செல்லும் வழியில் உப்பனாற்றைக் கடந்து செல்ல வேண்டும். பாலம் உள்ளது. நல்லவழி. ஒருகாலத்தில் **நாங்கூர்** நாட்டின் தலைநகராக இருந்துள்ளது. 6 பெருமாள் கோயிலும், 2 சிவன் கோயிலும் உள்ளன. 6 பெருமாள் கோயிலும் ஆழ்வார்களால் மங்களசாசனம் செய்யப்பெற்றன. சிவன் கோயிலில் ஒன்று திருப்பணி நடந்தேறியுள்ளது. மற்றொன்று தொடங்கி விடப்பட்டு உள்ளது. திருப்பணி 1973-ல் தொடங்கி நின்று விட்டது.

திருநாட்டுத் தொகை.

தேங்கூரும் திருச்சிற்றம் பலமுஞ் சிராப்பள்ளி
பாங்கூர் எங்கள் பிரான் உறையுங் கடம்பந்துறை
பூங்கூரும் பரமன் பரஞ்சோதி பயிலுமூர்
**நாங்கூர்** நாட்டு நாங்கூர் நறையூர் நாட்டு நறையூரே.

**61. நியமம்.** அ. 6. 13. 4.

சுவாமி பெயர்; ஐராவதஈஸ்வரர்-அலங்கார அம்பிகை.

பூதலூர் ரயில் நிலையத்தை அடுத்த மேலைத்திருக்காட்டுப் பள்ளி என்னும் பாடல் பெற்ற தலத்திற்கு இரண்டு மைலில் உள்ளது நேமம் என்று இப்போது வழங்கப்படுகிறது. நெடுஞ்சாலை வழியில் பாதையை அடுத்து உள்ளது. கோயில் திருப்பணி தொடங்கி நின்று உள்ளது. பெருமான் இளங்கோயிலில் உள்ளார். இரண்டு கால பூசை நடைபெறுகின்றது. சேக்கிழார், சம்பந்தப் பெருமான் இக் கோயிலை நெடுங்காளம் வழிபட்டு வந்து நியமம் வழிபட்டு காட்டுப் பள்ளி சென்றார் என்று கூறுகின்றார்.

நெடுங்களத்து ஆதியை அன்பால் "நின்பால்
    நெஞ்சம் செலாவகை நேர்விலக்கும்
இடுப்பைகள் தீர்த்து அருள்செய்வாய்" என்னும்
    இன்னிசை மாலை கொண்டேத்தி யேகி
அடுப்பணிச் செஞ்ச டையார் பதிகள்
    அணைந்து பணிந்து **நியமம்** போற்றிக்
கடுங்கை வரை உரித்தார் மகிழ்ந்த
    காட்டுப்பள் ளிப்பதி கை தொழுவார்

(பெரிய புராணம்)

**62. நெய்தல்வாயில்.** அ. 6. 71. 7

காவிரிப் பூம்பட்டிணத்துக்கு அருகேயிருந்த நெய்தலங்கானல் ஆகலாம். 'கடல் கொள்ளப்பட்டு எஞ்சிய இவ்வூர் நெய்தல் வாசல் என்ற பெயருடன் உள்ளது' என்பர் க. வெள்ளைவாரணம்.

கடுவாயர் தமைநீக்கி என்னை ஆட் கொள்'
    கண்ணுதாலோன் நண்ணுமிடம் அண்ணல் வாயில்
நெடுவாயில் நிறைவயல்சூழ் நெய்தல் வாயில்
    நிகழ்முல்லை வாயிலொடு ஞாழல் வாயில்
மடுவார் தென்மதுரை நகர் ஆலவாயில்
    மறிகடல் சூழ் புனவாயில் மாடநீடு
குடவாயில் குணவாயி லான எல்லாம்
    புகுவாரைக் கொடுவினைகள் கூடா வன்றே

**63. நெற்குன்றம்.** ச. 2. 39. 9.

திருச்சிராப்பள்ளி மாவட்டம், முசிறி வட்டம் தின்னகோணம் என்ற ஊரில் உள்ள முதற்பராந்தகன் கல்வெட்டு இதனை திருவிசற்

குன்றம் எனக்கூறுகிறது. இறைவன் பெயர் திருமாடத்து கூனஞர் எனவும், சடஞண்டார் எனவும் குறிப்பிட்டுள்ளது என்பர் க. வெள்ளைவாரணம்.

**64. பஞ்சாக்கை.** அ. 6. 70. 8

'திருக்கடவூருக்கு அருகில் உள்ளது என்பர்' செங்கல்வராயப் பிள்ளை.

**65. பாற்குளம்.** அ. 6. 13. 1.

பழையாற்றில் உள்ள ஒரு தீர்த்தக் குளம் என்பர். தி. வை. சதாசிவபண்டாரத்தார்.

பழையாறு பற்குளமும் கைவிட்டிந்நாள்
புறம்பயம் நம்மூரென்று போயினாரே'

என்பது திருத்தாண்டகம். சித்தாடமும் அதிசைச் சேயஞயர் வீரட்டஞ் சூழ்ந்து தத்துங்கெடில புனலும் உடையார், எனத்தலமும் தீர்த்தமும் சேர்ந்து வருதலால் தலப்பெயரே எண்ணி வர வேண்டு மென்ற நியதி இல்லை. சோழ மாளிகை அரிச்சந்திரம் என்ற தலத்திற்கு முன்புள்ள குளம் பாற்குளம் என்று கூறுகின்றனர்.

கொடிமாட நீள்தெருவு கூடல் கோட்டூர்
கொடுங்கோளூர் தண்வளவி கண்டி யூரும்
நடமாடு நன்மருகல் வைகி நாளும்
நலமாகும் ஒற்றியூர் ஒற்றி யாகப்
படுமாலை வண்டறையும் பழனம் பாசூர்
பழையாறும் பாற்குளமுங் கைவிட் டிந்நாள்
பொடியேறு மேனியராய்ப் பூதம் சூழப்
புறம்பயம்நம் ஊரென்று போயி ஞரே.

**66. பிடவூர் :** அ. 6. 7. 6; 6. 70. 2.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் துறையூருக்கு அருகில் உள்ளது பட்டூர் என்று வழங்குகின்றது. ஊட்டத்தூரென்னும் ஊற்றத்தூரிலிருந்தும் போகலாம்.

21-வது தலமாகக் கூறியுள்ள ஊற்றத்தூருக்குச் சொல்லிய வழியைப் பார்க்க.

திருக்கயிலையில் சேரமான் பாடிய ஆதிஉலாவென்றும், திருக்கைலாய ஞானவுலாவென்று போற்றும் உலாவை

சாத்தனர் என்னும் ஐயனர் இந்த ஊரில் கொண்டுவந்து வெளியிட்டார் என்று சேக்கிழார் பெருமான் வெள்ளானைச் சருக்கத்தில் பாடுகின்ருர். இங்கு உள்ள சிவாலயத்திற்கு அருகில் ஐயனருக்கு பெரிய கற்கோயில் உள்ளது. கருவறையில் உள்ள ஐயனர் திருவுருவம் இருகையிலும் ஏட்டுச் சுவடியுடன் காட்சி தருகின்ருர். ஆனல் அந்த மூர்த்தி வழிபாடற்றுச் சிதைந்த நிலையில் உள்ளது. வெளவால்கள் கருவறையில் தஞ்சம் புகுந்துள்ளன.

பெரிய சிவாலயம். 5 நிலை ராசகோபுரத்துடன் விளங்குகிறது. சிற்ப நுட்பங்கள் உள்ளன. ஒரு காலத்தில் தேர்த்திருவிழா நடைபெற்றுள்ளது. பழுதுபட்ட நிலையில் திருத்தேர் உள்ளது. கோயில் நல்லமுறையில் கவனிப்பில்லை.

பிடவூரில் எழுந்தருளிய ஐயனரைப் 'பிடவூரன்' என்று போற்றுவார் சுந்தரர். (7. 96. 6)

அம்மானே ஆகம சீலர்க் கருள் நல்கும்
பெம்மானே பேரரு ளாளன் பிடவூரன்
தம்மானே தண்தமிழ் நூற்புலவாணர்க்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி அம்மானே.

ஐயனர்க்கும், திருப்பிடவூர்க்கும் உள்ள தொடர்பை சேக்கிழார் பெருமான் பின் வருமாறு வெள்ளானைச் சருக்கத்தில் 52வது பாடலில் அருளிச் செய்கின்ருர்

சேரர் காவலர் விண்ணப்பம்
    செய்தஅத் திருவுலாப் புறம்அன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற்
    கேட்டமா சாத்தனர் தரித்திந்தப்
பாரில் வேதியர் திருப்பிட
    வூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கும்
நார வேலைசூழ் உலகினில்
    விளங்கிட நாட்டினர் நலத்தாலே

(பெரிய புராணம்)

அப்பர் காப்புத் திருத்தாண்டகம்.

தெய்வப் புனற் கெடில வீரட்டமுஞ்
    செழுந்தண் பிடவூருஞ் சென்று நின்று
பவ்வந் திரியும் பருப்பதமும்
    பறியலூர் வீரட்டம் பாவநாசம்

மவ்வந் திரையு மணிமுத்தமும்
மறைக்காடும் வாய்மூர் வலஞ்சுழியும்
கவ்வை வரிவண்டு பண்ணே பாடுங்
கழிப்பாலை தம்முடைய காப்புக்களே

பட்டூர் என்னும் திருப்பிடவூர் ஊட்டத்தூரிலிருந்து பாடலூர் சிறுகானூர் வழியாகவும் செல்லலாம்.

**67. பிரம்பில்** அ. 6. 70. 6.

இறைவன் : கைலாசநாதர்—பிரவர்த்தபாமதி.

தஞ்சையை அடுத்த கள்ளபிரம்பூர் என்று வழங்குகின்றது. சிறிய கோயில், கோயிலுக்கு எதிரில் படித்துறை உள்ள குளம் உள்ளது வழிபாட்டு நிலை.

மண்ணிப் படிக்கரை வாழ்கொளி புத்தூர்
வக்கரை மந்தாரம் வார ணாசி
வெண்ணி விளத்தொட்டி வேள்விக் குடி
விளமர் விராடபுரம் வேட்க ளத்தும்
பெண்ணை அருட்டுறை தண் பெண்ணா கடம்
**பிரம்பில்** பெரும்புலியூர் பெருவே ளூரும்
கண்ணை களர்காறை கழிப்பாலையுங்
கயிலாய நாதனையே காண லாமே.

ஊர் கிராமம்; அழகிய நடராசர்; தஞ்சையிலிருந்து 5 மைல், பூதலூர் சாலையில் உள்ளது.

**68. புலிவலம் :** 6. 51. 11; 6. 70. 11.

திருவாரூர் அருகில் ரயில்வே நிலையத்திற்கு அருகில் உள்ளது. நடுத்தரக் கோயில். செங்கல் திருப்பணி. கோயிலுக்குள் உள்ளே செல்வதற்குப் பயங்கரமாக உள்ளது. பாழடைந்த நிலை. எதோ ஒரு கால பூசை பெயரளவிற்கு நடைபெறுகிறது.உடனடியாகத் திருப்பணி செய்யாவிட்டால் இத்தலம் இத்தலைமுறையில் அழிந்து விடும் அபாய நிலையில் உள்ளது.

புலிவலம் புத்தூர் புகலூர் புன்கூர்
புறம்புயம் பூவணம் பொய்கை நல்லூர்
வலிவலம் மாற்பேறு வாய்மூர் வைகல்
வலங்குழி வாஞ்சியம் மருகல் வன்னி

நிலமலி நெய்த்தானத்தோடு எத்தானத்தும்
நிலவுபெருங் கோயில் பல கண்டால்தொண்டீர்
கலிவலி மிக்கோனைக் கால்விரலால் செற்ற
கயிலாய நாதனையே காண லாமே.

**69. பேராவூர் :** அ. 6. 70. 2; 6. 71. 4.

இறைவன் பெயர் ; ஆதித்தேஸ்வரர்–ஞானம்பாள்

மாயவரத்திலிருந்து டவுன்பஸ் உள்ளது. மாயவரம் வட்டம் கிராமம். சிறிய கோயில், பழுதுபட்ட நிலை. 4–3–1972ல் விழாத் திருப்பணி தொடங்கி நின்று விட்டது.

ஆரூர் மூலட்டானம் ஆனைக்காவும்
ஆக்கூரிற் தான்தோன்றி மாடம் ஆவூர்
பேரூர் பிரமபுரம் **பேரா வூரும்**
பெருந்துறை காம்பீலி பிடவூர் பேணும்
கூடரார் குறுக்கை வீரட்டானமும்
கோட்டூர் குடமூக்குக் கோழம் பமும்
காரார் கழுக்குன்றும் கானப்பேரும்
கயிலாய நாதனையே காண லாமே.

**70. மணற்கால் :** அ. 6. 25. 10.

திருவாரூரை அடுத்த பெருவேளூருக்கு அண்மையில் உள்ளது. நல்லநிலை, கருங்கல் திருப்பணி; கவனிப்பும் போதாது. இராப்பட்டீச்சுரம் என்னும் தலம் இதன் அருகில் உள்ளது.

நல்லூரே நன்றாக நட்ட மிட்டு
நரையேற்றைப் பழையாறே பாய வேறிப்
பல்லூரும் பலிதிரிந்து சேற்றூர் மீதே
பலர் காணத் தலையாலங் காட்டி னூடே
இல்லார்ந்த பெருவேளூர்த் தளியே பேணி
இராப்பட்டீச்சரங் கடந்து மணற்கால் புக்கு
எல்லாருந் தளிச்சாத்தங்குடியிற் காண
இறைப்பொழுதிற் திருவாரூர் புக்கார் தாமே.

**71. மந்தாரம் :** அ. 6. 70. 6.

இறைவன் பெயர் : மந்தாரவனேஸ்வரர்—அபயாம்பிகை

ஆத்தூர் என்று வழங்குகின்றது. வைத்தீஸ்வரன் கோயிலி லிருந்து திருப்பனந்தாள் பாதையில் மணல்மேடு என்ற ஊருக்கு வடமேற்கே உள்ளது. மிகப் பழைய கோயில், செங்கல் திருப்பணி திருப்பணி தொடங்கி விட்டு விட்டனர். நடராசர் திருவுருவம்

பேரழகுடையது சுவாமி கருவறையில் தஞ்சம் புகுந்துள்ளார். கோயில் ஊருக்குப் புறத்தில் உள்ளது. சுற்றும் வயல்வெளி; மந்தாரை என்னும் மரம் தலவிருட்சம். இதையொட்டியே இக்கோயிலுக்கு மந்தாரம் என்று பெயர் வந்துள்ளது. நந்தி பூசை செய்த தலம், தவனீ முத்தி பெற்ற தலம். உடனடியாகத் திருப்பணி செய்யப்பட வேண்டிய நிலை. நடராசர் சிவகாமமூர்த்திகள் மிகப் பெரியவை. அற்புதமான பேரழகுடையவை,

கோயில் உள்ள பகுதி இப்போது கல்யாண சோழபுரம் என்று வழங்குகின்றது. மந்தாரம் தலவிருட்சம் இன்றும் உள்ளது.

(பாடல் தலம் 67-இல் காண்க)

**72. மாந்துறை;**

பெரிய புராணத்தில் சம்பந்தர் வழிபட்டதாகக் கூறப்பட்டு உள்ளது. லால்குடிக்கு அருகில் உள்ள பாடல் பெற்ற தலம். காவிரியின் வடக்குக்கரையில் உள்ள ஆடுதுறை ரயில் நிலையத்தில் இருந்து ஒருமைல் தூரத்தில் உள்ள மங்கலக்குடிக்கு அருகில் உள்ள தென்கரை மா ந் து றை. பெரிய சிவாலயம்; கவனிப்பில்லை; வருவாயும் சரிவர இல்லை. மதுரை ஆதினத்திற்கு உட்பட்டது.

கஞ்சனூர் ஆண்ட தங்கோனைக்
கண்ணுற்றிறைஞ்சி முன் போந்து
மஞ்சணி மாமதில் சூழும்
மாந்துறை வந்து வணங்கி
அம்சொல் தமிழ்மாலை சாத்தி
அங்ககன்று அன்பர் முன்பாக
செஞ்சடை வேதியர் மன்னும்
திருமங்குடி சேர்ந்தார்.

(பெரியபுராணம்)

**73. மூவலூர். அ. 5. 55. 8.**

மயிலாடுதுறைக்கு அருகில் கஞ்சனூர் என்னும் பாடல் பெற்ற தலத்திற்கு சமீபத்தில் உள்ளது. மூவலூர் பெரிய சிவாலயம். நல்ல நிலை; கல் திருப்பணி; நாலுகால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்குறுந் தொகை.**

**திருப்பூவனூர்.**

பூவனூர் தண் புறம்புயம் பூம்பொழில்
நாவலூர் நள்ளாறொடு நன்னிலம்
கோவலூர் குடவாயில் கொடுமுடி
மூவலூரும் முக் கண்ணனூர் காண்மினே,

**74.** முழையூர். 6. 70. 1. ; 6. 41. 9.

கும்பகோணத்திற்கு அருகில் பட்டீச்சுரம் என்னும் சோழ நாட்டுத் திருத்தலத்திற்குக் கிழக்கிலும் பழையாறை வடதளிக்குத் தெற்கிலும் உள்ளது. நல்ல நிலையில் உள்ளது. கல்திருப்பணி. 4 கால வழிபாடு நடைபெறுகிறது.

அ. 6. 70. 1.

தில்லைச் சிற்றம்பலமுஞ் செம்பொன் பள்ளி
தேவன்குடி சிராப்பள்ளி தெங்கூர்
கொல்லிக்குளிர் அறைப்பள்ளி கோவல்
வீரட்டங் கோகரணங் கோடி காவும்
முல்லைப் புறவம் முருகன் பூண்டி
**முழையூர்** பழையாறை சத்தி முற்றம்
கள்ளிற்றிகழ் சீரார் காளத்தியும்
கயிலாய நாதனையே காண லாமே.

**75.** வரிஞ்சை. சு. 7. 39. 7.

இஃது இரிஞ்சையூர் என்று இப்போது வழங்குகின்றது. **ஊர்** கிராமம்; சிறிய கோயில்; சத்திநாயனார் பிறந்தருளிய தலம். நாயனாருக்குக் கோயிலினுள் தனிக் கோயில் உள்ளது.

கீழ் வேளூரிலிருந்து திருத்துறைப்பூண்டிப் பாதையில் 5 அல்லது 6 மைல் தூரத்தில் உள்ளது.

திருத்தொண்டர் தொகை.

பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்
பொழிற்கருவூர் த்துஞ்சிய புகழ்ச்சோழர்க்கு அடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையற்கு அடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தற்கு அடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி **வரிஞ்சையர்** கோன் அடியார்க்கும் அடியேன்
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆருரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

(சுந்தரர்)

**76.** வழுவூர். அ. 6. 70. 1. ; 3. 71. 2.

மாயவரத்திற்கு அருகில் உள்ளது. 'வழுவை வீரட்டம்' என்பது அப்பர் வாக்கு; அட்ட வீரட்டங்களில் ஒன்று. பெரிய சிவாலயம். கோவிலினுள் பெரிய திருக்குளம் உள்ளது.

(கஜசம்காரமூர்த்தி) யானைத் தோலை உரித்துப் போர்த்தி தனிச் சிறப்புடன், சிற்ப நயத்துடன் கூடியதாக உள்ளது. ஒரு திருவுருவில் முன் மார்பகமும் பின்புறமும் தெரியும் படியாக திருகி நிற்கும் காட்சிப் பார்க்கத்தக்கது.

காவிரியின் தென்கரைக் கண்டி வீரட்டானங்
கடவூர் வீரட்டானங் காமருசீர் அதிகை
மேவிய வீரட்டானம் வழுவை வீரட்டம்
வியன் பறியல் வீரட்டம் விடையூர்திக்கிடமாம்
கோவல் நகர் வீரட்டங் குறுக்கை வீரட்டங்
கோத்திட்டைக் குடிவீரட்டானம் இவை கூறி
நாவினவின்று உரைப்பார்க்கு நணுகச்சென்றால்
நமன் தமருஞ் சிவன் தமரென்று அகல்வர்நன்கே.

**77. நல்லாற்றூர் : 6. 71. 4.**

இத்தலம் கும்பகோணம் மாயவரம் புகைவண்டி இருப்புப் பாதை வழியில் நரசிங்கன் பேட்டைக்கு அருகில் உள்ளது. நல்லாற்-றூர், நாட்டின் தலைநகர்.

அடைவுத்திருத்தாண்டகம்-4.

பிறையூருஞ் சடைமுடியெம் பெருமானூர் ஊர்
பெரும்பற்றப் புலியூரும் பேராவூரும்
நறையூரும் நல்லூரும் நல்லாற்றூரும்
நாவலூருஞ் சேற்றூரும் நாரையூரும்
உறையூரும் ஒத்தூரும் ஊற்றத்தூரும்
அளப்பூர் ஓமாம்புலியூர் ஏற்றியூரும்
துறையூருந் துவையூருந் தோழூர் தானுந்
துடையூருந் தொழ விடர்கள் தொடராவன்றே.

**78. ஏமப்பேறூர். அ. 6. 70. 3.**

நமி நந்தி அடிகள் நாயனார் பிறந்தருளிய தலம். திருவாரூர் கோயிலில் தண்ணீரில் விளக்கு எரித்தவர்.

எண்ணெய்க்குப் பதிலாக தண்ணீரில் விளக்கு எரித்துப் பேறு பெற்றதனால் இத்தலம் 'திருநெய்ப்பேறு' என்று வழங்குகின்றது. நாயனார் வீடு கோயிலுக்கு எதிரில் உள்ளது. அதில் அவர் உருவம் வைத்து வழிபடுகின்றனர். கோயில் வாயிலில் நாயனார் எண்ணெய்க் குடுவையுடன் நிற்கிறார். பழமையான சிவாலயம்; சிதைந்த நிலையில் உள்ளது.

இடைமருது ஈங்கோய் இராமேச்சரம்
இன்னம்பர் ஏர்இடவை ஏமப்பேறூர்
சடைமுடி சாலைக்குடி தக்களூர்
தலையாலங்காடு தலைச்சங்காடு
கொடுமுடி குற்றாலங் கொள்ளம்பூதூர்
கோத்திட்டை கோட்டாறு கோட்டுக்காடு
கடைமுடி கானூர் கடம்பந்துறை
கயிலாய நாதனையே காணலாமே.

இத்தலம் திருவாரூர் திருத்துறைப்பூண்டிப் பேருந்து வழியில் 4 வது மைலில் உள்ளது.

## 79. விளத்தொட்டி 6. 70. 6.

மாயூரம் வட்டத்தில் மந்தாரத்திற்கு அருகில் உள்ள கோயில்; திருப்பணி செய்து நல்லநிலை. 4 கால பூசை உள்ளன.

வைத்தீஸ்வரர் கோயிலிருந்து திருப்பனந்தாள் செல்லும் பாதையில் ஆத்தூர் என்னும் கல்யாண சோழபுரம் என்று வழங்கும் தலத்தை அடைந்து அங்கிருந்து விளத்தொட்டி என்னும் இத்தலத்தை அடையலாம். அல்லது கும்பகோணத்திலிருந்து பந்தனைநல்லூர் திருச்சிற்றம்பலம் வழியாக இத்தலத்தை அடையலாம்.

மண்ணிப் படிக்கரை வாள்கொளி புத்தூர்
வக்கரை மந்தாரம் வார ணாசி
வெண்ணி விளத்தொட்டி வேள்விக் குடி
விளமர் விராடபுரம் வேட்க ளத்தும்
பெண்ணை அருட்டுறைதண் பெண்ணா கடம்
பிரம்பில் பெரும்புலியூர் பெருவே ளூரும்
கண்ணை களர்காறை கழிப் பாலையுங்
கயிலாய நாதனையே காண லாமே.



# பாண்டியநாட்டு வைப்புத் தலங்கள் : 16

## திருவாசகத் தலங்கள் 3

1. அக்கீச்சுரம்—அ. 6. 71. 8
2. அண்ணல் வாயில் (சித்தண்ணவாசல்)-அ.6.71.7.
3. அத்தீச்சுரம் (சிவச்சைலம்)—அ. 6. 71. 8.
4 அகத்தீச்சுரம் —அ 6. 71. 8.
5. அயனீச்சுரம்—அ. 6. 71. 6.
6. இளையான்குடி—அ. 7. 39. 1
7 கந்தமதான மலை—அ. 6. 71. 8.
8. செந்தில்—அ. 6. 23. 4.
9. தஞ்சாக்கை (தஞ்சாக்கூர்)—அ. 7. 12. 9.
10. தென்களக்குடி—அ. 6. 71. 3.
11. தேவீச்சுரம்—அ. 6. 7. 5.
12. பொதியின்மலை பாபநாசம்.
13. பெருந்துறை—அ. 6. 70. 2; 6. 71 11.
    பாபநாசம்—அ. 6. 7. 6.
14. வாதவூர்—ச. 2. 39. 7.
15. ஓரியூர்—திருவாசகத்தலம்
16. பட்டமங்கை—திருவாசகத் தலம்
17. உத்தரகோசமங்கை—திருவாசகத் தலம்
18. மிழலை நாட்டு மிழலை—7. 12. 5. சுந்தரர்.
19. வெற்றியூர்

**1. அக்கீச்சுரம்** அ. 6. 71. 8.

இறைவன் : கயிலாசநாதர்

வன்னிக் கரந்தை என்பர் செங்கல் வராயபிள்ளை. இத்தலம் ஆழ்வார் குறிச்சிப் புகைவண்டி நிலையத்தில் இருந்து அரை மைல் தொலைவிலுள்ளது. கயிலாசநாதர் கோயில் என்று வழங்குகின்றது. திருவாடுதுறை ஆதினத்திற்குட்பட்ட கோயில்களில் ஒன்று. சிறிய கோயில்.

தஞ்சை மாவட்டத்தில் உள்ள கஞ்சனூரிலுள்ள சிவாலயம் 'திருவக்கீச்சுரம்' என சாசனத்திற் பெற்றுள்ளது. அக்கி - நெருப்பு

'அனலோன் போற்றும் காவலனைக் கஞ்சனூர்
ஆண்ட கோவை' என அப்பர் அடிகள் போற்றுதலால் அக்கீச்சுரம் என்னும் பெயர்க்காரணம் நன்கு விளங்கும். அக்கீச்சுரம் என்பது கஞ்சனூர் என்னும் சோழ நாட்டுப் பாடல் பெற்ற திருத் தலமே என்பது க. வெள்ளைவாரணம் அவர்களின் கருத்து.

**2. அண்ணல் வாயில்** அ. 6. 71. 7.

புதுக்கோட்டைக்கு அருகில் '' சித்தண்ண வாசல் '' என்று வழங்குகின்றது. குட வரைக் கோயில்; ஒரு பெரும் பாறையைக் குடைந்து மேல் தலத்தில் மகேந்திர பல்லவன் உருவம் முதலாகப் பல சித்திரங்கள் பண்டைக் காலத்தில் தீட்டி உள்ளனர். சித்திரம் பல நூற்றாண்டுகள் ஆயினும் வண்ணம் இன்னும் அழியாமல் உள்ளது. இக்குட வரைக் கோயிலை அடுத்துள்ளது சித்தண்ணவாசல் என்ற ஊர்.

கடுவாயர் தமைநீக்கி என்னை ஆட்கொள்
கண்ணுதலோன் நண்ணுமிடம் **அண்ணல் வாயில்**
நெடுவாயில் நிறைவயல் சூழ்நெய்தல் வாயில்
நிகழ்முல்லை வாயிலொடு ஞாழல் வாயில்
மடுவார்தென் மதுரைநகர் ஆல வாயில்
மறிகடல்சூழ் புனவாயில் மாட நீடு
குடவாயில் குணவாயில் ஆன வெல்லாம்
புகுவாரைக் கொடுவினைகள் கூடா வன்றே.

**3. அத்தீச்சுரம்** அ. 6. 71. 8.

இறைவன் பெயர் : சிவச்சைலம்—பரம கல்யாணி.

சிவச்சைலம் என்று வழங்குகின்றது. ஆழ்வார் குறிச்சிப் புகை வண்டி நிலையத்திலிருந்து மூன்று மைல். இராசகோபுரம் உள்ளது. திருப்பணி சமீபத்தில் செய்யப்பட்டு உள்ளது. சிவலிங்கத்தின் பின் புறத்தில் சடை உள்ளது அதைப் பார்ப்பதற்கு கருவறையில் துளை உள்ளது. பெரிய சிவாலயம்.

**4. அகத்தீச்சுரம்** அ. 6. 71. 8.

இறைவன் பெயர் : அகத்தீஸ்வரன்

கன்னியாகுமரியிலிருந்து மூன்று மைல் தூரத்தில் உள்ளது. கருங்கல் திருப்பணி; நல்ல நிலையிலுள்ளது; வழிபாடுகள் ஒழுங்காக நடைபெற்று வருகின்றன. அகத்தியர் வழிபட்ட தலம்.

பாடல் : சோழநாடு 8ஆம் தல வரலாற்றில் காண்க.

**5. அயனீச்சுரம்** அ. 6. 71. 8.

அம்பா சமுத்திரம் என்னும் ஊரிலிருந்து 1 மைல் தொலைவில் உள்ளது. இப்பொழுது 'பிரேம தேசம்' என்ற பெயரால் வழங்கு கின்றது. தாமிரபரணி ஆற்றங்கரையில் உள்ளது. பெரிய சிவாலயம் இராச கோபுரம் உள்ளது. வருவாய் போதிய அளவு இல்லை. கவனிப்பு மோசம். சுற்றுப்புறத்தை விட கோயில் சற்று பள்ளத்தில் உள்ளதால் மழை பெய்தால் சேற்று நீர் கோயிலினுள் சென்று சேறு படுகின்றது.

அயன் : பிர்மா ; ஈச்சுரம் : தேசம்

அயனீச்சுரம் : பிரமதேசமென்று வடமொழியில் மாற்றி வழங்கி வருகின்றனர்.

**6 இளையான்குடி** அ. 7. 39. 1.

இத்தலம் இராமநாதபுரம் மாவட்டம் பரமக்குடிக்கு அருகில் உள்ள எமனேஸ்வரம் என்னும் ஊருக்கு 3 மைல் தூரத்தில் உள்ளது. பேருந்து செல்லும் நெடுஞ்சாலை வழி. இளையான்குடி மாறநாயனார்

திருஅவதாரம் செய்த திருத்தலம். நாயனார்வீடு கோயிலாக உள்ளது. நாயனார், அவர் மனைவியார் திருஉருவங்கள் சிலை வடிவிலும், எழுந் -தருளும் பஞ்சலோக மூர்த்தியாகவும் உள்ளன. கோயில் சிறியது. ஊர் ஓரத்தில் நாயனார் முளை வாரி வந்து அடியார்க்கு அமுதளித்த நாற்றங்கால் 'அடியார் செய்' என்று வழங்குகிறது. நிலம் கோயில் குருக்கள் வசத்தில் உள்ளது. இதன் அருகே பழமையான கல்வெட்டுச் சாசனம் ஒன்று பலகைக் கல்லில் உள்ளது. வயல் ஓரத்தில் உள்ள தெருவில் நாயனார் மரபினரான வேளாளப் பெருமக்கள் குடியிருக் -கின்றனர். ஊரில் மிகுதியான பேர் இஸ்லாம் மதத்தைச் சேர்ந்தவர் -கள். பிராமணர்கள் திப்புசுல்தான் காலத்தில் இம் மதத்தில் சேர்ந்த தாக கூறுகின்றனர். இஸ்லாமியராயினும் சிவாலய நிர்வாகத்தில் அறங்காவலர்களாக பங்கேற்றுள்ளனர். நாயனார் வரலாற்றை அன்புடன் கூறுகின்றனர்.

ஒரு இஸ்லாமிய அன்பர் இளையான்குடி என்ற பெயர் வரக் காரணம் பின்வருமாறு கூறுகின்றார். ஆண்டவன் எத்தகைய சோதனை செய்யினும் அதற்கு 'இளைக்காதவர்' குடியிருந்த ஊர் ஆதலால் இளையான்குடி என்ற பெயர் வந்தது என்று கூறினார்.

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க்கு அடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
**இளையான்றன்** குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கு அடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க்கு அடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

## 7. கந்த மதான மலை : அ. 6. 71. 9.

திருச்செந்தூர் முருகனது ஆலயத்தினுள்ள பெருமாள் கோவிலைச் சேர்ந்தாற்போல் மணல் சிறு சிறு மலையானது போல் மலைப் பகுதி காட்டப்பட்டுள்ளது. அந்த மலையும் சேர்ந்து கட்டிடம் உள்ளது.

கந்தமதானங் கயிலைமலை கேதாரங்
காளத்தி கழுக் குன்றங்கண்ணார் அண்ணா
மந்தமாம் பொழில் சாரல் வடபர்ப்பதம்
மகேந்திர மாமலை நீலம் ஏமகூடம்

விந்த மாமலை வேதஞ் சையம் மிக்க
 வியன் பொதியின்மலை மேருவுதயம் அத்தம்
இந்து சேகரன் உறை மலைகள் மற்றும்
 ஏத்துவோம் இடர் கெட நின்றேத்து வோமே

8. **செந்தில்** அ. 6. 23. 4.

இத்தலம் திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலிக்கு 24 மைல் தூரத்தில் கடற்கரை ஓரத்தில் திருச்செந்தூர் என்ற பிரபல மான முருகன் தலமாக விளங்குகின்றது. முருகன் சூரசம்காரத்தின் பொருட்டு தெற்கு நோக்கி வந்த போது சிவபூசை செய்தருளிய தலம். கருவறையில் முருகன் பூசித்த லிங்கமும் அதன் பின்புறத்தில் பஞ்ச லிங்கமும் உள்ளது. 63வர் முதலாக சிவத்தலத்திற்கு உரிய எல்லா மூர்த்தங்களும் உள்ளன. பலர் இதை ஒரு சிவத்தலமென்றே அறியார். அப்பர் பெருமான் காலத்திலேயே முருகனுக்கு பெருமை விளக்கமாக உள்ளது. அவரும் 'நம் செந்தின் மேய வள்ளி மணா -ளர்க்குத் தாதை கண்டாய்' என்று முருகனைச் சிறப்பித்துக் கூறுகின்றார்.

திருமறைக்காடு

கள்ளி முதுகாட்டில் ஆடி கண்டாய்
 காலனையுங் காலால் கடந்தான் கண்டாய்
புள்ளியுழை மானின் தோலான் கண்டாய்
 புலியுரிசேர் ஆடைப் புனிதன் கண்டாய்
வெள்ளிமிளிர் பிறைமுடி மேற்சூடி கண்டாய்
 வெண்ணீற்றான் கண்டாய் நம்செந்தின் மேய
வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்
 மறைக் காட்டுறையும் மணாளன் தானே.

9. **தஞ்சாக்கை** சு. 7. 12. 9.

இத்தலம் **தஞ்சாக்கூர்** என்று வழங்குகின்றது. மதுரையில் இருந்து இராமனாதபுரம் செல்லும் பாதையில் 16 மைல் தொலைவில் உள்ள திருபாச்சேத்தி அடைந்து கிளை வழியில் 3 மைல் சென்றால் இத் தலத்தை அடையலாம்.

சிறிய அளவில் கோயில் உள்ளது. கருங்கல் திருப்பணி; மௌன சுவாமி என்ற துறவி இக் கோயிலைத் திருப்பணி செய்துள்ளார். 'தஞ்சை வாணன்' கோவை என்ற நூலைப் பாடிய பொய்யா மொழிப் புலவர் பிறந்தவூர். ஊர் பெரிய கிராமம் என்று சொல்லாம்.

திருநாட்டுத் தொகை

தழலு(ம்) மேனியன் தையலொர் பாகம் அமர்ந்தவன்
தொழலுந் தொல்வினை தீர்க்கின்ற சோதி சோற்றுத்துறை
கழலுங் கோவை யுடையவன் காதலிக்கும் இடம்
பழனம் பாம்பணி பாம்புரஞ் தஞ்சை தஞ்சாக்கையே.

**10. தென்களக்குடி** அ. 6. 71. 3.

இறைவன் : சத்திய வாகீஸ்வரர் - கோமதி அம்மன்

இத்தலம் கரவந்தபுரம் - களக்காடு என்று வழங்குகின்றது.

தென்களக்குடி என்று அப்பர் போற்றும் இத்திருத்தலம் குமரி மாவட்டத்தில் வள்ளியூர் என்னும் தலத்திற்கு சுமார் 16 மைல் தூரத் -தில் ''களக்காடு'' என்ற பெயரால் வழங்குகின்றது. சரித்திரச் சிறப்பு உடையது. மிகப் பெரிய சிவாலயம்.

சிற்ப வேலைப்பாடு மிக்க திருக்கோயில். சிற்பங்கள் மகா மண்ட பத்தில் ஆள் உயரத்தில் உள்ளன. இறைவன் திரு முன் வாயிலில், கோயில் திருப்பணி செய்த வீரமார்த்தாண்ட தேவர் ஒரு புறமும், சுந்தரரும், சேரமானும் ஒரு புறமும் உள்ளனர்.

புருஷ மிருகம் பீமனைப்பிடிக்கும் காட்சி அருமை இது போன்ற சிற்பங்கள் 32 தூண்களில் உள்ளன. 32 கொடுங்கைகள் திருப்பெருந் துறையில் உள்ளது போல் உள்ளன. சுந்தரும் சேரமானும் இத்தலத் -தில் வழிபட்டதைக் காட்டும் சிற்பம் போற்றுதற்குரியது.

பாடல் 13 வது பக்கத்தில் 25 வது தலக்குறிப்பில் காண்க

**11. தேவீச்சுரம்** அ. 6. 7. 5.

வடிவீச்சுரம் என்று வழங்குகின்றது. நாகர்கோயில் பேருந்து நிலையத்திற்கு எதிரில் சிறு தெருவில் இக்கோயில் உள்ளது. நடுத்தரக் கோயில். கல் திருப்பணி.

திருவதிகை வீரட்டானம் காப்புத் திருத்தாண்டகம்

செழுநீர்ப் புனற் கெடிய வீரட்டமுந்
திரி புராந்தகந் தென்னூர் தேவீச்சரம்
கொழுநீர் புடை சுழிக்குங் கோட்டுக்காவுங்
குட மூக்குங் கோகரணங் கோலக்காவும்

பழிநீர் மையில்லாப் பனங் காட்டூரும்
பனையூர் பயற்றூர் பராய்த் துறையும்
கழுநீர் மது விரியுங் காளிங்கமுங்
கணபதீச் சரத்தார் தங்காப்புக் களே.

12. பாபநாசம் அ. 6 7. 6.

இறைவன் : அகத்தீஸ்வரர்

பொதியின் மலைச்சாரலில் உள்ள பாபநாசம் என்று விளக்க மாகத் தெரியும் தலமாகும். பெரிய சிவாலயம். கோயிலின் முன் தாம்பிரபரணி ஆறு, மலை உச்சியில் தோன்றி ஓடி வருகின்றது. மலை உச்சியில் அகத்தியர் கோயில் உள்ளது. அகத்தியருக்கு இறைவன் திருமணக்காட்சி அளித்த தலம் என்பர்.

காப்புத் திருத்தாண்டகம்

தெய்வப் புனற் கெடிலவீ ரட்டமுஞ்
செழுந் தண்புட ஆருஞ்சென்று நின்று
பவ்வந் திரியும் பருப்பதமும்
பறியலூர்வீ ரட்டம் **பாவநாசம்**
மவ்வந் திரையும் மணிமுத்தமும்
மறைக் காடும்வாய் மூர்வலஞ் சுழியும்
கவ்வை வரிவண்டு பண்ணே பாடுங்
கழிப்பாலை தம்முடைய காப்புக் களே.

**பொதியன்மலை பாபநாசம் :** பாண்டிய நாட்டில் உள்ள பொதிய மலையில் உள்ள தலம்.

ச. அ. 1. 50. 10; 79. 1; 6. 70. 8.

இத்தலத்தை பற்றி ஏற்கனவே கூறப்பட்டுள்ளது.

பொதியன்மலை என்பது பாண்டிய நாட்டுப் **பாபநாசம்** என்று கூறுவார் செங்கல் வராய பிள்ளை.

13. பெருந்துறை அ. 6. 70. 2; 6. 71. 11

இறைவன் : கயிலாயநாதர்

திருப்பெருந்துறை வடக்கூடரில் உள்ள பழைய சிவாலயம். கயிலாயநாதர் கோயில் என்று கூறுவர்.

திருப்பள்ளியெழுச்சி 8 வது பாட்டில்

செந்தழல் புரைதிருமேனியுங் காட்டித்
திருப் பெருந்துறையுறை கோயிலுங் காட்டி
அந்தணன் ஆவதும் காட்டி வந்தாண்டாய்
ஆரமுதே பள்ளி எழுந்தருளாயே

என்று கூறுவது ஆதிகயிலாய நாதர் கோயிலாகும்.

மாணிக்க வாசகர் எடுத்த கோயில் விளக்கம் பெற்றுவிட்ட படியால் பழைய கோயில் கவனிப்பாரற்றுக் கிடக்கின்றது. இக் கோயிலும் பெரியகோயில், கருங்கல் திருப்பணி, கவனிப்புப்போதாது ஊருக்குப் புறத்தில் வடக்கூர் என்ற பகுதியில் உள்ளது.

க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம்.

ஆரூர் மூலட்டானம் ஆனைக் காவும்
ஆக்கூரில் தான்தோன்றிமாடம் ஆவூர்
பேரூர் பிரமபுரம் பேரா வூரும்
பெருந்துறை காம்பீலி பிடவூர் பேணும்
கூரார் குறுக்கை வீரட்டானமும்
கோட்டூர் குட மூக்குக் கோழுப் பழம்
காரார் கழுக்குன்றும் கானப்பேரும்
கயிலாய நாதனையே காண லாமே.

**14. வாதவூர்: ச. 2. 39. 7.**

திருவாதவூர் மாணிக்கவாசகரும் பாரி வள்ளலின் உயிர்த் தோழராகிய கபிலரும் பிறந்தருளிய பெரும் பதி. பெரிய சிவாலயம். திருப் பெருந்துறை போன்று கொடுங் கைகள் உள்ளன. சிற்ப நுட்பம் உடையன இராச கோபுரம் உள்ளது. மாணிக்க வாசகருக்கு தனிக் கோயில் அதேதெருவில் உள்ளது. அவர் வீடே கோயிலாக மாறிற்று போலும்.

''வாதவூரினில் வந்தினி தருளிப்
பாதச்சிலம் பொலி காட்டிய பரிசும்''

என்று மணிவாசகர் கூறுவர்.

மதுரைக்குச் சுமார் 18 மைல் தூரத்தில் வைகை ஆற்றின் கரையில் உள்ளது. கோயில் அருகே ''பெரிய கண்மாய்'' என்னும் ஏரி உள்ளது

பாடல், பக்கம் 15ல் 28-வது தலக்குறிப்பில் காண்க.

**15. ஓரியூர் :** கீர்த்தி அகவலில் திருவாசகத்தில் கூறப்படுகின்றது.

''ஓரியூரின் உகந்தினிது அருளிப்
பாரிரும் பாலகனாகிய பரிசும்''

இத்தலம் இராமநாதபுரம் மாவட்டம் திருஆடானை என்னும் பாடல்பெற்ற தலத்திலிருந்து திருப்புனவாயில் என்னும்தலத்திற்குப் போகும் வழியில் ஆடானையிலிருந்து 36 மைல் தூரத்தில் உள்ளது. ஆனால் கால வெள்ளத்தில் கோயில் அழிந்து, கிருத்துவர் ஆதிக்கத்திலுள்ள காலி இடமாக உள்ளது. சிவகங்கை என்ற குளம் மட்டும் உள்ளது.

**16. பட்டமங்கை :** திருவாசகத்தலம் பட்டமங்களம் என்று வழங்குகின்றது. இராமநாதபுரம் மாவட்டத்தில் குன்றக்குடி என்னும் பிரபல முருகன் தலத்திற்கு 8 மைல் தூரத்தில் உள்ளது. நடுத்தரக் கோயில். நல்ல நிலை.

திருவாசகம் : கீர்த்தி அகவல்.

''பட்ட மங்கையிற் பாங்காயிருந்தங்கு
அட்டமாசித்தி அருளிய அதுவும்''

**மக்கீச்சுரம் :** அ. 6. 71. 18.

அரேபியா நாட்டில் உள்ள மக்கா நகரம் என்பர். க. வெள்ளைவாரணம். (பன்னிருதிருமுறை வரலாறு முதல்பாகம்; வைப்புத்தலங்கள்)

**17. உத்தரகோசமங்கை :** திருவாசகத்தலம்

திருவாசகத்தில் மாணிக்கவாசக சுவாமிகளால் பலபடப் பாராட்டிப் போற்றப்பட்டது. திருவாசகத்தில் பல பகுதிகள் இங்கு பாடப்பட்டது. ''பாண்டிய நாடே பழம்பதியாகவும் உத்திரகோசமங்கை ஊராகவும்'' என்று ஆண்டவனுக்கு உரிய ஊரே உத்திரகோசமங்கை என்று போற்றுவர். மிகப்பெரிய சிவலாயம். திருப்பணி தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

இராமநாதபுரம் அரசர் ஆளுகைக்கு உட்பட்டது.

இராமநாதபுரத்திலிருந்து சுமார் 8 கி. மீ. மதுரை சாலையில் வந்து பின்னர் இடப்புறமாகத் திருச்செந்தூர் செல்லும் சாலையில் 6 கி. மீ. செல்லவேண்டும்.

18. மிழலை நாட்டு மிழலை: அ. 7. 12. 5.

பெருமிழலைக் குறும்ப நாயனர் பிறந்தருளிய தலம். புதுக்கோட்டைக்கு அருகில் உள்ளது. பெருமாநல்லூர் என்று வழங்குகின்றது. குன்றைக் குடைந்து கோயில் எடுத்துள்ளனர். குறும்ப நாயனர் திருவுருவம் குடையப்பட்டுள்ளது. காட்டுக்குள் தனிமையாக உள்ளது. உத்தண்டராம பிள்ளை ஆணையராக இருந்தபோது செய்த முயற்சியால் இக்கோயிலைக் கண்டு இதன் அருகே பெருமிழலைக் குறும்பர் சமாதி ஒன்று கட்டுவித்து சுந்தரர், குறும்பர் இருவர் திருவுருவமும் எதிர் எதிராகத் நிறுவப்பட்டுள்ளது.

திருவீழிமிழலை என்று பாடல் பெற்றதால் வெண்ணிநாட்டைச் சேர்ந்தது.

புதுக்கோட்டைச் சீமை திருமெய்யத்துக்கு மேற்கே உள்ள பேரையூரினின்றும் மேற்கில் ½ மைல் தூரத்தில் தேவமலையில் உள்ள குடவறைக் கோயில்.

குழலை வென்ற மொழிமடவாளையோர் கூறனும்
மழலையேற்று மணாளனிடம் தடமால் வரைக்
கிழவன் கீழைவழி பழையாறு கிழையமும்
**மிழலை நாட்டு மிழலை** வெண்ணிந் நாட்டு மிழலையே.
(சுந்தரர்)

19. வெற்றியூர்: 2. 39. 6.; 6. 70. 8; 7. 12. 3.

கோயிலுக்கு எதிரில் திருக்குளம் உள்ளது. சிலர் இதனை ஜயபுரி என்றும் கூறுகின்றனர்.

பழமையான சிவாலயம். பாண்டிய நாட்டில் உள்ள திரு-ஆடானை என்னும் திருத்தலத்திற்கு 8 மைல் தூரத்தில் உள்ளது. பெரிய கிராமம். வெள்ளிக்கிழமைகளில் சுற்றப்புற ஊர்களிலிருந்து பெருந்திரளான மக்கள் கோயிலுக்கு வருகின்றனர். அதற்கு ஏற்ப பலவிதமான கடைகள் தெருவில் சாமான்கள் வைத்து இருக்கின்றனர். இத்தலத்தை ச. அ. சு. மூவரும் குறிப்பிடுகின்றனர்.

சுந்தரர் நாட்டுத் தொகை 3.

மூலனூர் முதலாயமுக் கண்ணன் முதல்வனூர்
நாலனூர்நரை ஏறுகந்து ஏறிய நம்பனூர்
கோல நீற்றன் குற்ருலங் குரங்கணின்முட்டமும்
வேலனூர் **வெற்றியூர்** வெண்ணிக்கூற்றத்து வெண்ணியே.

# கொங்கு நாட்டு வைப்புத் தலங்கள்.

1. ஆன்பட்டி பேரூர்—ச. 6. 7. 10. அ. சு. 2. 3. 91; 6. 70. 1; 7. 47. 4; 7. 82. 10; 7 90. 10.
2. ஏழூர்—அ. 6. 70. 5.
3. தோழூர்—அ. 6. 70. 5.
4. குரக்குத்தளி—7. 42. 2.
5. கொல்லிஅறப்பள்ளி—அ. 6. 70. 1.
6. தகடூர்(தர்மபுரி)—சு. 7. 12. 1.
7. பரப்பள்ளி—அ. 6. 71. 1.
8. பூந்துறை—அ. ச. 3. 92. 8; 6. 71. 11
9. மாட்டூர்—ச. சு. 2. 39. 7; 7. 47. 1.
10. கொங்கு குமரித்துறை.
11. மொக்கனீச்சரம்—திருவாசகத்தலம்.



# கொங்கு நாட்டு வைப்புத் தலங்கள்.

1. ஆன்பட்டி பேரூர்—ச. 6. 7. 10. அ. சு. 2. 3. 91; 6. 70. 1; 7. 47. 4; 7. 82. 10; 7 90. 10.
2. ஏழூர்—அ. 6. 70. 5.
3. தோழூர்—அ. 6. 70. 5.
4. குரக்குத்தளி—7. 42. 2.
5. கொல்லிஅறப்பள்ளி—அ. 6. 70. 1.
6. தகடூர்(தர்மபுரி)—சு. 7. 12. 1.
7. பரப்பள்ளி—அ. 6. 71. 1.
8. பூந்துறை—அ. ச. 3. 92. 8; 6. 71. 11
9. மாட்டூர்—ச. சு. 2. 39. 7; 7. 47. 1.
10. கொங்கு குமரித்துறை.
11. மொக்கனீச்சரம்—திருவாசகத்தலம்.



1. ஆன்பட்டி-பேரூர் : ச. அ. சு. :
2. 39. 1.; 6. 70. 1.; 7. 47. 4 ; 7. 82. 10.; 7. 90. 10.

இறைவன் : பட்டிப்பெருமான்—பச்சைநாயகி.

கோயம்புத்தூருக்கு 3 மைல் மேற்கில் உள்ள மிகப்பெரிய சிவாலயம். மூவரும் தங்கள் தங்கள் தேவாரப் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்கள். காஞ்சிமாநதி என்னும் நொய்யலாற்றின் கரையில் உள்ளது இத்தலம்.

''பேரூர் உறை வாய்ப்பட்டிப் பெருமான் பிறவா நெறியானே'' என்று போற்றுவார் சுந்தரர்.

'பேரூர் பெருமானைப்புலியூர் சிற்றம்பலத்தே பெற்ருமன்றே' என்று இருதலத்தையும்சேர்த்து பாடுவார் சுந்தரர். மேலைச்சிதம்பரம் என்றும் குடகத்தில்லை அம்பலம் என்று அன்பர்கள் போற்றுவர். கூத்தப்பெருமான் எழுந்தருளி உள்ள இவ்வம்பலம் நம்நாட்டில் எங்கும் இல்லாத ஒன்று. சிற்ப நுட்பம் மிகச்சிறந்தது. பட்டிமுனி, கோமுனிக்கு இறைவன் நடனகாட்சி அளித்ததலம். காமதேனுவின் மகள் பட்டி வழிபட்ட தலம் என்பர். நடராசர் சபை நாய்க்க அரசர்கள் காலத்தில் கட்டப்பட்டதென்று கல்வெட்டு கூறும்.

ஊர்த்தொகை : சுந்தரர் 4.

அரூர்அத்தா ஐயாற்று அமுதே அளப்பூர் அம்மானே
காரூர்பொழில்கள் புடைசூழ் புறவில் கருகா வூரானே
பேரூர் உறைவாய் பட்டிப்பெருமான் பிறவா நெறியானே
பாரூர் பலரும் பரவப்படுவாய் பாசூர்அம்மானே.

கொங்கு நாட்டில் பேரூர் பெருமானைத் தரிசித்த சுந்தரர் நேராகத் தில்லை சென்று கூத்தப்பெருமானை தரிசிக்கின்ருர். தில்லைக் கூத்தன் பேரூர்ப் பெருமானுகக் காட்சி கொடுக்கின்ருர்.

இதனைச் சுந்தரர்

''மீக்கொங்கில் அணிகாஞ்சி வாய்ப்பேரூரர்
பெருமானைப் புலியூர் சிற்றம்பலத்தே பெற்ருமன்றே''

என்று சுந்தரர் திருச்சிற்றம்பலப்பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார். பேரூர் கூத்தப்பிரான் திருமேனி கெம்பீரத் தோற்றமும் சிற்பநுட்பமும் உடையன.

2. ஏழூர்: அ. 6. 70. 5.

இத்தலம் சேலம் மாவட்டத்தில் நாமக்கல் என்ற ஊருக்கு வடக்கில் 7 (அ) 8 மைல் தூரத்தில் உள்ளது. படையெடுப்புக் காலத்தில் கோயில் அழிந்து விட்டது. சிதைந்த கல் தூண்கள், விட்டங்கள் கிடக்கின்றன. பெரிய ஊர்; சிவலிங்கம் மிகப் பெரியது; 5 அடி உயரம் உள்ளது. கூரைக் கொட்டகையில் அம்மூர்த்தியை வைத்து ஒரு சாது வழிபட்டு வருகின்றார்.

அழிந்துபட்ட அக்கோயிலின் தேவதாசிகள் கற்பூரவல்லி சுந்தரவல்லி என்ற இரு சகோதரிகளின் வரலாறு மயிர் கூச்சம் எடுக்கக்கூடியது.

இப்பெண்மணிகள் இருவரும் பொது நலத் தொண்டாக விவசாயத்திற்குப் பயன்பட ஏரி ஒன்று எடுத்தனர். இந்த ஏரி 5 மைல் பரப்பளவு உள்ளது. பித்தளை உலோகத்தால் மதகு வார்த்துப் போட்டுள்ளனர். இவர்கள் மேல், பொறாமை காரணமாக அந்த ஊர் காணி ஆச்சிக்காரர்கள் எவ்வளவு தொல்லை கொடுக்க முடியுமோ அவ்வளவும் கொடுத்து வந்தார்கள். அப்பெண்மணிகள் சொத்தெல்லாம் விற்று அப்பணியைச் செய்தனர். தாங்கள் கட்டி இருக்கும் சேலைகளைத் தவிர சங்கம சொத்து யாவற்றையும் விற்று ஏரியை நிறைவு செய்தனர். காணி ஆச்சிக்காரர்கள் தூண்டுதலால் கூலி ஆட்கள் தங்கள் கூலியைக் கொடுக்க வற்புறுத்தினார்கள். பெண்களுக்குக் கூலியை கொடுக்க வழியில்லை. நன்கு மழை பொழிந்து ஏரி நிறைந்தது. பித்தளை மதகு வழியாக வயல்களுக்கு நீர் பீரிட்டுக் கொண்டு பாய்ந்தது. பெண்கள் மனம் குளிர்ந்தது. ஆனால் வேலை செய்த ஆட்களின் கூலியோ கொடுக்க முடியவில்லை. கூலி ஆட்களின் நிர்பந்தமோ அளவு கடந்தன. ஒரு நாள் வேலையாட்களை கூலி தருவதாக அழைத்து ஏரிக்கரைக்கு வந்தனர். ஏரி நிறைந்து இருக்கும் காட்சியைக் கண்டனர். தங்கள் இலட்சியம் நிறைவேறி விட்டதை அறிந்து மகிழ்ந்தனர். கூலி ஆட்களை நோக்கி தங்களிடம் கட்டியிருக்கும் சேலையைத் தவிர வேறொன்றும் இல்லை. இவைகளை எடுத்துக் கொள்ளுங்கள் என்று கூறி தங்கள் சேலைகளை அவிழ்த்து விட்டு கீழ்வருமாறு காணி ஆட்சிக் காரருக்குச் சாபம் இட்டுவிட்டு ஒருவரையொருவர் கட்டிப் பிடித்துக் கொண்டு ஏரியில் வீழ்ந்து உயிர்

துறந்தனர். அந்தோ பரிதாபம். இவர்கள் உருவச் சிலைகள் சிறு கோயிலில் இந்த ஏரியின் கரையில் உள்ளது. பொதுமக்கள் வழி பட்டு வருகின்றனர். ''எங்கெங்கும் மழை பொழிய ஏழூர் ஏரி நிறைய வந்தவர்கள் வாழ வேண்டும். காணி ஆச்சிக்காரர் கருவற்றுப் போக'' என்பது அச்சாபம் ஆகும். அச்சாபத்தின் பயனால் ஏழூரில் வெளியூர் களில் இருந்து குடியேறியவர்களே நல்லநிலையில் உள்ளனர். பழமை யாக அந்த ஊரில் இருந்தவர்கள் நசிந்து போய் வெளியூர்களில் குடி-யேறி விட்டனர். இன்றும் ஏழூரை அடுத்த சுற்றுப் புற ஊர்களில் வாழும் பல குடும்பங்கள், ஏழூரான் வீடு என்று கூறுகின்றனர்.

ஏழை அழுத கண்ணீர் கூரிய
வாளினை ஒக்கும்

### 3. தோழூர் அ. 6. 70. 5; 6. 71. 4.

இத்தலம் கொங்கு நாட்டில் சேலம் மாவட்டத்தில் நாமக்கல் என்ற ஊரின் தென்பால் சில மைல்கள் தூரத்தில் உள்ளது. பழமை யான சிவாலயம். கருங்கல் திருப்பணி; கவனிப்புப் போதாது; கோயில் விளக்கமாக இல்லை.

அ. க்ஷேத்திரக்கோவை 5.

கொடுங்கோளூர் அஞ்சைக்களஞ் செங்குன்றூர்
கொங்கணம் குன்றியூர் குரக்குக்காவும்
நெடுங்களம் நன்னிலம் நெல்லிக்காவும்
நின்றியூர் நீடூர் நியமநல்லூர்
இடும்பாவனம் எழுமூர் 'ஏழூர் தோழூர்'
எறும்பியூர் ஏராரும் ஏமகூடம்
கடம்பை இளங்கோயில் தன்னில்உள்ளும்
கயிலாய நாதனையே காண லாமே.

ஏழூர், தோழூர் ஆகிய இரண்டு தலங்களும் கொங்கு நாட்டில் சேலம் மாவட்டத்தில் நாமக்கல் என்ற ஊருக்கு வடக்கில் ஏழூரும் தெற்கில், தோழூரும் உள்ளன.

பாடல் பக்கம் 11ல் 20 வது தலக்குறிப்பில் காண்க.

### 4. குரக்குத்தளி 7. 47 2.

இத்தலம் தற்பொழுது சர்க்கார் பெரியபாளையம் என்று வழங்-குகின்றது. ஈரோட்டிற்கு அருகே உள்ள கூலிபாளையம் புகைவண்டி நிலையத்திற்கு அருகில் உள்ள ஊர். ஈரோட்டிலிருந்தும், திருப்பூரிலி-ருந்தும் பேருந்து வண்டி மூலம் இவ்வூரை அடையலாம்.

இத்தலம் கொங்கு நாட்டில் குறும்பு நாட்டில் அமைந்துள்ள படியால்,

கொங்குற் குறும்பிற் குரக்குத்தளியாய் என்று போற்றுவர் சுந்தரர்.

சுந்தரர் கொங்கு நாட்டினுள் மூன்றுமுறை வந்து சென்றுள்ள படியால் தலங்களைத் திட்டவட்டமாகச் செக்கு பந்தியோடு கூறுகின் -றார். குரங்கினத்து அரசனாகிய சுக்கிரீவன் வழிபட்ட படியால் குரக்குத்தளி என்று பெயர் வந்தது போலும். பெரிய ஆலயம்; கருங்கல் திருப்பணி; கோயிலைச் சுற்றிலும் வயல்வெளி உள்ளது. நடராசர் திருவுருவம் பேரழகு உடையது.

சுந்தரர் ஊர்த்தொகை. 2

தொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய் குழகாகுற்றாலா
மங்குல் திரிவாய் வானோர் தலைவாவாய்மூர் மணவாளா
சங்கக் குழையார் செவியாஅழகா அவியா அனலேந்திக்
கங்குல் புறங்காட்டாடீ அடியார் கவலை களையாயே.

5. **கொல்லி அறப்பள்ளி** அ. 5 34. 1.

**கொல்லி மலை**

கள்ளார் கமழ் கொல்லி அறப்பள்ளி 6. 70. 1.
(2ம் திருமுறை பொதுப்பதிகம், திருக்ஷேத்திரக்கோவை)

அறப்பளீச் சுர சதகம் என்பது இத்தலத்து இறைவனைச் சார்த்தி இயற்றப்பட்டது. கொல்லிமலை மீது மீன்பள்ளி ஆற்றங்கரையில் உள்ள அழகிய தலம் கொல்லிமலை மண் மலை. மா, பலா, வாழை முதலிய மரங்கள் அடர்ந்துள்ளன. மீன்பள்ளி ஆற்றிலிருந்து நீர் கோயிலுக்கு அருகில் அழகிய அருவியாக விழுகின்றது. இம் மலையில் இன்னும் பல அருவிகளும் உள்ளன. சதுரகிரி என்று கூறுவர். இம் மலை மீது பல ஊர்கள் உள்ளன. மலைவாழ் மக்கள் இன்னும் போதிய நாகரீகம் அடையவில்லை. கோயில் பெரியது. போதிய வருவாய் இல்லை. சேலம் மாவட்டம், சேந்த மங்கலாம் ஊரினின்றும், தாத்தையங்கார் பேட்டை வழியாகவும் சென்று இக்கோயிலை அடையலாம். தாத்தையங்கார் பேட்டை வழியாக நல்ல பாதை போட்டுள்ளனர். கோயில் வாசலுக்கே உந்து வண்டி, வேன் வண்டிகளில் போகலாம். தற்பொழுது பேருந்து வண்டியும் போகிறது. உறையூர் பசிப்பிணி மருத்துவர் என்னும் அருணாசல முதலியார் திருப்பணி பல லட்சம் ரூபாயில் தொடங்கி குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது.

## 2 ஆம் திருமுறை க்ஷேத்திரக்கோவை 4-ப் பாட்டு

அறப்பள்ளி அகத்தியான்பள்ளி வெள்ளைப்
பொடிபூசி ஆறணிவானமர் காட்டுப்பள்ளி
சிறப்பள்ளி சிறாப்பள்ளி செம்பொன்பள்ளி
திருநனிபள்ளி சீர் மநேந்திரத்துப்
பிறப்பில்லவன் பள்ளி வெள்ளச் சடையான்
விரும்பும் இடைப்பள்ளி வண் சக்கரமால்
உறைப்பால் அடிபோற்றக் கொடுத்தபள்ளி
உணராய் மடநெஞ்சமே உன்னிநின்றே

### அ. திருக்குறுந்தொகை-1

கொல்லியான் குளிர்தூங்கு குற்றலத்தான்
புல்லியார் புரம்மூன்றெரி செய்தவன்
நெல்லியான் நிலையான நெய்தானனைச்
சொல்லிமெய் தொழுவார் சுடர்வாணரே

### அ. க்ஷேத்திரக்கோவை திருத்தாண்டகம்

தில்லைச் சிற்றம்பலமுஞ் செம்பொன் பள்ளி
தேவன்குடி சிராப்பள்ளி தெங்கூர்
கொல்லிக்குளிர் அறைப்பள்ளி கோவல்
வீரட்டங் கோகரணங் கோடிக் காவும்
முல்லைப் புறவம் முருகன் பூண்டி
முளையூர் பழையாறை சத்தி முற்றம்
கல்லில்திகழ் சீரார் காளத்தியும்
கயிலாய நாதனையே காண லாமே

**6. தகடூர் :** சு. 7. 12. 1.

இத்தலம் தர்மபுரி என்று விளக்கமாக உள்ளது பெரிய சிவாலயம் சிற்ப நுட்பம் மிக்கது. அதியமான் என்னும் குறுநில மன்னன் ஆண்ட தலைநகரம். இவ்வூரின் அருகே அதியமான் கோட்டை என்ற பெயர் திரிந்து அதமன்கோட்டை என்று வழங்கு கின்றது. கோயில் நல்லநிலை. ஔவைக்கு அரிய நெல்லிக்கனியைக் கொடுத்து 'நீலமாமிடற்று ஒருவன்போல மன்னுக பெரும' என்று ஔவையாரால் போற்றப்பட்ட அதிகனின் தலைநகர்.

## சு.7. 21. 1. திருநாட்டுத் தொகை.

விழக் காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
கூழைஏறு உகந்தானிடங் கொண்டதுங் கோவலூர்
தாழையூர் தகடூர் தக்களூர் தருமபுரம்
வாழை காய்க்கும் வளர்மருகல் நாட்டு மருகலே.

7. பரப்பள்ளி : அ. 6. 71. 1.

கோவை மாவட்டம் தாராபுரத்தை அடுத்த பரன்சேர்பள்ளி என்ற ஊர். பெரிய கிராமம். பெரிய சிவாலயம். அம்மைக்குக் கோயில் தனியாக உள்ளது. கருங்கல் திருப்பணி; கவனிப்புப் போதாது.

காங்கய நாட்டுப் பரன் சேர் பள்ளியிலுள்ள நாட்டூர் அமர்ந்தார் என்பது தென்னிந்தியக் கல்வெட்டு. வழிபாட்டு நிலையிலுள்ளது.

## அடைவுத் திருத்தாண்டகம்.

பாடல் பக்கம் 22ல் 39 வது தலக்குறிப்பில் காண்க.

8. பூந்துறை அ. ச 3. 92. 8/6 70 11.

கொங்கு நாட்டில் ஈரோட்டிலிருந்து 6 மைல் தொலைவில் உள்ளது. பழமையான சிவாலயம். நன்கு புதுப்பிக்கப்பட்டுள்ளது. கொங்கு நாட்டின் வேளாளப் பழங்குடி மக்களின் பல குடும்பங்களுக்-குக் குல தெய்வம்.

இதை திருநெல்வேலியிலுள்ள சிந்து பூந்துறை என்றும் கூறுவர், செங்கல் வராய பிள்ளை. சிந்து பூந்துறை என்பது திருநெல்வேலியிலுள்ள தாம்பர பரணி ஆற்றின் ஒரு துறையே ஆகும். இது தனித்தலமன்று.

## 92. திருநெல்வேலி பதிகம் 8 வது பாட்டு

முந்திமா விலங்கலன்று எடுத்தவன்
முடிகள் தோள் நெரிதரவே
உந்திமா மலரடி ஒருவிரல்
உகிர் நுதியால் அடர்த்தார்

கந்தமார் தரு பொழில் மந்திகள்
பாய்தர மதுத்திவலை
சிந்து பூந்துறை கமழ் திருநெல்வேலி
உறை செல்வர் தாமே

இத்துறைக்குச் சிந்து பூந்துறை யென்ற பெயர் வந்ததற்குக் காரணம் சம்பந்தர் விளக்குகின்றார்.

கந்தமார் தருபொழில் மந்திகள்
பாய்தர மதுத் திவலை சிந்து பூந்துறை
கமழ் திருநெல்வேலி உறை செல்வர்,

ஆற்றின் கரையிலுள்ள சோலைகளில் குரங்குகள் பாய அதனைல் சோலைகளில் உள்ள மலர்களில் உள்ள தேன் சிந்துததால் தேன் மணம் விசும் துறையினை உடைய ஆற்றின் கரையினை உடைய திருநெல்வேலி என்று ஆற்றின் துறையைச் சிறப்பித்துள்ளமை காணலாம். இது தனித்தலமன்று.

பொது அடைவுத் திருத்தாண்டகம் 11.
பாடல் : 28-ம் பக்கத்தில் 51 வது தலக்குறிப்பில் காண்க.

**9. மாட்டூர்** ச. சு. 2. 39. 7 / 7. 47. 1.

இறைவன் ; வாலீஸ்வரர்

இத்தலம் கோவை மாவட்டத்தில் அவிநாசி என்ற பாடல் பெற்ற தலத்திற்கு 5 மைல் தூரத்தில் சேவூர் என்று வழங்குகின்றது. இது தனித்தலம் என்று உணராத சில உரையாசிரியர்கள் 'மாட்டை ஊர்ந்து செல்வன்' என்று பொருள் விரித்துள்ளனர்,

காளை மாட்டை சேங்கன் என்றும் சே என்றும் கூறுதல் மரபு. மாட்டூரே சேவூர் என்று வழங்குகின்றது. இத்தலத்தில் சுந்தரர் மிகவும் ஈடுபாடு கொண்டுள்ளார்.

''மாட்டூர் அறவா மறவா துன்னைப் பாடப் பணியாயே'' என்று நெஞ்சுருகப் பாடுவார். பழமையான பெரிய சிவாலாயம். பெரிய ஊர். கருங்கல் திருப்பணி. கவனிப்புப் போதாது. சுவாமி, அம்மை இருவருக்கும் தனித்தனியாகப் பெரியகோவில் உள்ளது. வாலி பூசைசெய்தது சேவூர். இவன் தம்பி சுக்ரீவன் பூசை செய்தது குரக்குத்தளி.

சுந்தரர் : ஊர்த்தொகை.

காட்டூர் கடலே கடம்பூர் மலையே கானப்பேருராய்
காட்டூர் கொழுந்தே அழுந்தூர் அரசே கொழு
நற்கொல்லேறே
பாட்டூர் பலரும் பரவப்படுவாய் பனங் காட்டூரானே
பாட்டூர் அறவா மறவா துன்னைப்பாட பணியாயே.

10. **கொங்குதன்குமரித்துறை :** அ. பொது.

இறைவன் பெயர் : அசலதீபேஸ்வரர்.

பாபநாசத் திருக்குறுந்தொகை.

கொங்கு என்பதை மணம் என்று பொருள் கொண்டு குமரி என்பதை கன்னியகுமரி என்பர் உரை ஆசிரியர்.

கங்கை ஆடில்என் காவிரி ஆடில்என்
கொங்குதன் குமரித்துறை ஆடில் என்
ஓங்குமா கடல் ஓதநீர் ஆடில் என்
எங்கும் ஈசன் எனாதவர்க்கு இல்லையே.

கொங்குதன்குமரித்துறை என்பது கொங்கு நாட்டில் உள்ள குளிர்ந்த குமரித்துறை என்றது. அகண்ட காவிரியின் கரையிலுள்ள மோகனூர் என்பர் அறிஞர். இத்தலம் சேலம் மாவட்டத்தில் நாமக்கல் என்ற ஊரின் கிழக்கே சுமார் 15 மைல் தொலைவிலுள்ளது. காவிரி ஆற்றின் கரை ஓரத்தில் உள்ளது. சுவாமி சன்னதியிலிருந்து ஊற்று காவிரியில் வந்து கலக்கின்றது. இங்கு மிகப் பழமையான பெரிய சிவாலயம் ஒன்று உள்ளது. கருவறையில் உள்ள தீபம் எவ்வளவு காற்று அடித்தாலும் அசைவதில்லை. அதனால் சுவாமிக்கு ''அசலதீபேஸ்வரர்'' என்று பெயர் வழங்குகின்றது. பெரிய ஊர். இதன் அருகே குமரமங்கலம் என்ற சிற்றூரும் குமரி என்பதை நினைவூட்டுகிறது.

11. **மொக்கணீச்சரம் :** திருவாசகத்தலம்.

இறைவன் பெயர் : மொக்கணீஸ்வரர்.

மொக்கணி என்பது கொள்ளுப்பை. கொள்ளுப்பையினிடமாக இருந்து கொங்கு நாட்டுச்சிறந்த சிவபக்தனை சிற்றரசர் ஒருவருக்கு

இறைவன் காட்சி கொடுத்ததால் இப்பெருமான் மொக்கனீச்சுவரர் என்ற பெயர் பெற்ருர். இதனைத் திருவாசகத்தில் கீர்த்தி அகவலில் மாணிக்க வாசகப் பெருமான் 'மொக்கனி அருளிய முழுத்தழல்மேனிச் சொக்கதாகக் காட்டிய தொன்மையும்' என்று கூறி உள்ளார்.

மொக்கனி: கொள்ளுப்பை. குதிரை தின்னும் வேக வைத்த கொள்ளுப்பயிறை ஒரு பையிலிட்டுக் குதிரையின் வாயை பையினுள் வைத்து தலையோடு சேர்த்துக் கட்டி விடுவார்கள். அப்பையினில் உள்ள கொள்ளுப்பயிறை குதிரை தலையை ஆட்டி ஆட்டித்தின்னும். மொக்கனி என்ற சொல்லின் பொருள் புரியாதவர் முக்கண்ணி என்று திருவாசகத்தைப் பதிப்பித்தும், முக்கண்ணீசுவரர் என்று சுவாமி பெயரையும் எழுதியும் உள்ளனர். இத்தலம் மிகப் பெரிய சிவாலய மாக அவிநாசிக்கு அருகில் உள்ள சேவூருக்கு அருகில் இருந்து, அழிந்து பட்டுப் போய் தற்போது அம்மூர்த்திகளைக் கொண்டு சிறிய ஆலயமாக அருமையாக எடுத்து நல்ல முறையில் பரிபாலித்து வருகின்றனர்.

மொக்கனீச்சுவரர் தல வரலாறு : கொங்கு நாட்டுச் சிற்றரசர் ஒருவர். இவர் சிறந்த சிவ பக்தர். சிவலிங்க தரிசனம் இல்லாமல் உண்ணாத விரதத்தினர். ஒரு சமயம் குதிரைச் சேவகன் ஒருவனுடன் இவர் வேட்டைக்குச் சென்ருர். வேட்டை ஆடி முடிந்த பிறகு சிவலிங்க தரிசனத்திற்காகத் தன்னுடன் வந்த குதிரைச் சேவகனை அனுப்பி சிவலிங்கத்தினை தேடிப்பார்க்கச் சொன்னர். (பண்டைக் காலத்தில் மரத்தடியிலேயே சிவலிங்கம் அமைத்து வழிபட்டனர். பிற்காலத்திலேயே தனிக் கோயில் எடுத்தனர். கோயிலெடுத்த பிறகு இந்த மரங்கள் தல விருக்ஷம் என்று போற்றப்பட்டு வருகின்றன.

சிவலிங்க தரிசனம் இன்றி அரசன் உண்ண மாட்டார். ஆகை யால், அரசன் உண்ணாத போது தானும் உண்ண முடியாதாகையால் தன்னிடத்திலிருந்த குதிரைக்குக் கட்டும் கொள்ளுப்பையில் மண்ணை நிரப்பி ஒரு மரத்தடியில் வைத்துத் துண்டு சாத்தி மலரிட்டுச் சிவ-லிங்கம் போல் காட்சி அளிக்கச் செய்து அரசனுக்குக் காட்டினன். அரசர் சேவகன் செய்த சூழ்ச்சி அறியாது உண்மைச் சிவலிங்மாகவே கருதி வழிபட்டு உணவு உட்கொண்டார். பிறகு சேவகன் தான் வைத்த கொள்ளுப்பை அரசனின் பாவனை சக்தியினல் சிவலிங்கமாக மாறி இருப்பதை அறிந்து தானும் வழிபட்டான். இந்த வரலாற்-றையே மேற்கண்ட திருவாசக அடிகள் குறிப்பிடுகின்றன.

# சேர நாட்டு வைப்புத்தலங்கள்.

1. திருச்செங்குன்றூர்
2. கொடுங்கோளூர்
3. திருக்குணவாயில்
4. ஏறனூர் க. 7319. (ஏற்றமனூர்)



1. செங்குன்றூர் : அ. 6. 70. 5.

கொடுங்கோளூர் அஞ்சைக்களம் செங்குன்று என்று அப்பர் பெருமான் இத்தலத்தைக் குறிப்பிடுவர். இது மலைநாடு என்னும் சேர நாட்டின் திருத்தலம். மிகப்பெரிய சிவாலயம். பம்பை ஆற்றின் கரையில் உள்ள அழகிய ஊர். செந்நிறக்கற்கள் நிறைந்து மண் குன்றின் மீது இவ்வூர் உள்ளதால் செங்குன்றூர் என்று பெயர் பெற்றது போலும். விறன்மிண்டர் அவதாரத்தலம். இது கொங்கு நாட்டில் உள்ள கொடிமாடச் செங்குன்றூர் என்னும் திருச்செங்கோடு என்னும் தலத்திற்கு வேறானது. பெயர் ஒற்றுமை கொண்டு ஒன்றை மற்றய ஒன்ருக மயங்கற் பாலதொன்று அன்று. விறன் மிண்டர் அவதாரத் தலம் மலைநாட்டில் உள்ள செங்கனூர் என்று மலையாளர் வழங்கும் செங்குன்றூரே ஆகும் செங்குன்றூர், தாலூக்காவின் தலைநகர். எல்லா வசதியும் உள்ள பெரிய ஊராகும். இத்தலம் திருவாங்கூர் இராச்சியத்தில் கொல்லம் என்ற மேற்குக் கடற்கரை துறைமுக நிலையத்தில் இருந்து வடக்கே போகும் பெருவழியில் 25 மைல் அளவில் அடையத்தக்கது. வடக்கே இருந்து வருவோர் எர்ணகுளம் என்ற இருப்புப் பாதை நிலையத்திலிருந்து தெற்கே ஏற்றமனூர், கோட்டயம், செங்கரைச்சேரி, திருவில்லா ஊர்களைக் கடந்து ஏறக்குறைய 55 மைல் தொலைவில் இத்தலம் உள்ளது.

இத்தலத்தை இப்பொழுது செங்கண்ணூர் என்று மலையாளர் வழங்குவர். இத்தலத்தில் உள்ள அம்மன் பகவதி மிக பிரசித்தி பெற்றது. ஆண்டுக்குப் 10 முறை பூப்பு உற்சவம் மிகப் பிரபல மானது. அம்மை தரித்திருக்கும் ஆடையில் பூப்புக்கறை காணப்படுவ தாகக் கூறுகின்றனர். அது காணப்படில் கோயிலை திருக்காப்பிட்டு விட்டு உற்சவ மூர்த்தியை வெளி மண்டபத்தில் ஊஞ்சலில் வைத்து பூப்பு விழாக் கொண்டாடுகின்றனர். விழாவில் அம்மையை பம்பை ஆற்றில் நீராட்டிக் கருவறையில் சேர்ப்பர்.

2. கொடுங்கோளூர் : அ. சு. 6. 70. 5/7. 4. 1.

கொடுங்களூர், அஞ்சைக்களம் என்ற இரு தலங்களையும் ஒன்று சேர்த்தே தேவாரத்தில் வழங்குகின்றது கொடுங்களூர் சேரர் மன்னர்களின் தலைநகரம். இதை மகோதை என்றும் வழங்குவர். கொடுங்களூரும் அஞ்சைக்களமும் தனித்தனித்தலமாக விளங்கு-கின்றது. இரண்டு தலத்திற்கும் இடைவெளி 3 மைல் இருக்கும், இரண்டிலும் பெரிய சிவாலயங்கள் உள்ளன.

கொடுங்களூர் பெரிய நகரம். ஊராட்சி ஒன்றியம் உள்ளது. ஊர் நடுவில் பெரிய மைதானத்தில் பெரிய சிவாலயம் உள்ளது. இத்திருக்கோயிலில் அம்மன் ஆலயத்தின் கிழக்கில் சேரன் செங் குட்டுவன் எடுத்த கண்ணகி கோயில் உள்ளது. இது கண்ணகி சமாதிக் கோயில் என்று அறிஞர் கூறுவர். மலைநாட்டில் திருச்சூர் என்றும் திருசிவப்பேரூரினின்றும் 22 மைல் தொலைவில் பேருந்து மூலம் அடையத்தக்கது. நல்ல வழி.

அஞ்சைக்களம் சுந்தரரால் பாடப்பெற்ற திருத்தலம் ஆகும். இதற்கு இரண்டு பதிகம் உள்ளது. சேரமான் பெருமாள் நாயனர் திரு அவதாரம் செய்து அரசாண்ட அரியதலம். திரு அஞ்சைக்களம் கோவிலுக்கு அருகில் ''சேரமான் பரம்பு'' என்ற அரசர் அரண்மனை இருந்த பகுதி இருக்கின்றது. சுந்தர மூர்த்தி சுவாமிகள் இத்தலத்தினின்றே சேரமான் பெருமானுடன் கயிலை சென்றூர். அதற்குரிய சான்றுகளான சிற்பங்களும் வழிபாட்டு மூர்த்திகளும் இக்கோயிலில் உள்ளன. சேரமான் பெருமாள் பூஜித்ததும் அவருக்குச் சிலம்பொலி அளித்ததுமாகிய நடராச மூர்த்தி இத்தலத்தில் உள்ளது. அதன் பீடத்தில் ''அஞ்சைக்களம்சபாபதி'' என்று தமிழில் வெட்டி வைக்கப் பட்டுள்ளது.

க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம்.

கொங்கு நாட்டுத் தலம் 3ல் தோழூர் பக்கம் 55 ல் காண்க.

3. **திருக்குணவாயில் :** ச. அ. 6. 71. 7.

மலைநாட்டு வைப்புத்தலம். குணவாயிற் கோட்டம் என்று சிலப்பதிகாரத்தில் வருவது இதுவே ஆகும். கொடுங்களூருக்கு மேற் புறத்தில் உள்ளது என்பர். க. வெள்ளை வாரணம்.

கடுவாயர் தமை நீக்கியென்னை ஆட்கொள்
கண்ணுதலோன் நண்ணுமிடம் அண்ணல் வாயில்
நெடுவாயில் நிறைவயல் சூழ்நெய்தல் வாயில்
நிகழ்முல்லை வாயிலொடு ஞாழல் வாயில்
மடுவார் தென்மதுரை நகர் ஆலவாயில்
மறிகடல் சூழ் புனவாயில் மாடம்நீடு
குடவாயில் குணவாயில் ஆனவெல்லாம்
புகுவாரைக் கொடுவினைகள் கூடாவன்றே.

**4. ஏறனூர் :** ஏற்றமனூர். ஏற்றை ஊர்ந்து செல்பவனூர்.
7. 31. 9. (ஏறு-காளை)

ஏறனூர் என்னும் இத்தலம் மலைநாட்டில் ஏற்றமனூர் என்று வழங்குகின்றது.

மலைநாட்டில் எர்ணாகுளம் என்னும் புகைவண்டி நிலையத்திலிருந்து தெற்கே செல்லும் பெரும் வழியில் ஏற்றமனூர் என்ற இத் தலம் உள்ளது. மிகப்பெரிய சிவத்தலம். மலைநாட்டுச் சிறப்பான பெரிய சிவத்தலங்களில் இதுவும் ஒன்று.

## சு. இடையாற்றுத் தொகை.

பேறனூர் பிறைச் சென்னியினன் பெருவேளூர்
தேறனூர் திருமாமகள்கோன் திருமாலோர்
கூறனூர் குரங்காடுதுறை திருக்கோவல்
ஏறனூர் ஏய்தமான் இடையாறு இடைமருதே.

(சுந்தரர்)

# தொண்டை நாட்டு வைப்புத்தலங்கள்.

1. உருத்திரகோடி - 6. 70. 8. அ.
2. எழுமூர் - 6. 70. 6. அ.
3. கச்சிப்பலதளி - 6. 70. 4. அ.
4. கரபுரம் - 6. 71. 9. அ.
5, கச்சிமயானம - 6. 97. 10. அ.
6. கழுநீர்குன்றம் - 6. 13. 4. அ.
7. காம்பீலி - 6. 70. 2. அ.
8. காரிக்கரை - 7. 31, 3. அ.
9. குக்குடேச்சுரம் - 6. 71. 8. அ.
10. திருத்தெள்ளாறு - 6. 71. 10. அ.
11. திண்டீச்சுரம் - 6. 7. 8. + 6. 70. 9. அ.
12. புரிசைநாடடுப்புரிசை - 7. 12. 6. அ.
13. வளைக்குளம் - 6. 50. 8. அ.
14. திருவேட்டி - 6. 7. ⁄. அ.

**1. உருத்திரகோடி :** அ. 6. 70 8.

கோடி உருத்திரர் வழிபட்ட தலம். செங்கல்பட்டு மாவட்டத்தில் உள்ள திருக்கழுக்குன்றம் என்ற பாடல் பெற்ற தலத்தில் சங்கு தீர்த்தத்திற்கு தெற்கே ½ நாழிகை தூரத்தில் உள்ளது. கருங்கல் திருப்பணி. நடுத்தரக் கோயில். வழிபாட்டு நிலையில் உள்ளது.

அப்பர் பாடல்.

(சோழநாட்டுத்தலம் பக்கம் 5ல் 8வது ஆடகேச்சுரத்தில் காண்க)

**2. எழுமூர் :** அ. 6. 70. 6.

எழும்பூர் (எக்மோர்)

இப்பொழுது சென்னையின் பகுதியாக இருக்கும் எழும்பூர். முற் காலத்தில் டச்சுக்கார்ரர் ஆதிக்கத்தில் கோயில் அழிந்து மறைந்தது.

(பாடல் கொங்குநாடு 3வது பக்கம் 12ல் (தோழூர்) தலவரலாற்றில் காண்க)

**3. கச்சிப்பலதளி :** 6. 70. 4. அ.

கோயில்கள் நிறைந்த ஊர்கள் தமிழ்நாட்டில் காஞ்சீபுரமும், கும்பகோணமும் என்னும் இருதலங்களும் ஆகும். கும்பகோணத்தை விட காஞ்சீபுரத்தில் கோயில்கள் அதிகம் என்பர். காஞ்சியில் பாடல் பெற்ற தலங்கள் கச்சியே கம்பம். கச்சி அநேகதங்காவதம், கச்சி ஓணகாந்தன்தளி, கச்சி நெறிக்கரைககாடு ஆக ஐந்து ஆகும். மங்களசாசனம் பெற்ற திருமால்தலம் 13 ஆகும். தெருவுக்கொகு சிவாலயமும் திருமால் ஆலயமும் உள்ளன. அப்பர் பெருமான் காஞ்சியிலுள்ள எல்லாத் தலங்களையும் சேர்த்துக் கச்சிப்பலதளியும் கயிலாய நாதனையே காணலாமே என்று எல்லாத் தலங்களையும் சேர்த்துப் பாடினர்.

தளி=கோயில்

அப்பர் ஷேத்திரக்கோவைத்திருத்தாண்டகம்

(சோழ நாட்டுத் தலம் பக்கம் 8ல் தலம் 15ல் (இளமர்) காண்க)

**4. கரபுரம் :** 6. 71. 9. அ. திருப்பாற்கடல்.

வட ஆற்காடு மாவட்டம், வாலாஜாப்பேட்டை தாலுக்காவில் திருப்பாற்கடல் என்ற பெயரோடு வழங்குகின்றது. காஞ்சீபுரத்தில் இருந்து 22 மைல் தொலைவில் உள்ளது.

பழைமையான பெரிய ஊர். இவ்வூரில் தூஷன ஈஸ்வரர் ஆலயமும் இதை யடுத்துக் கிடந்தகோலத்தில் பெரிய பெருமாள் கோயில் உள்ளது. சிவன் கோயிலுக்கு எதிரரில் திருக்குளம் உள்ளது பொதுமக்கள் சிவன் கோயில் என்று இதை கூறுகின்றனர். பூஜை செய்யும் அர்ச்சகர் வைஷ்ணவப்பிரியராக இருந்தாலும் கிராம மக்களுக்குத் திருநீறே பிரசாதமாக வழங்குகின்ருர். கொடுக்கா விட்டால் திருநீறு கொடுங்கள் என்று கேட்டுப் பெறுகின்றனர்.

தூஷனேஸ்வரர் கோயில் கருவறையில் பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் ஆவுடையார்மேல் நின்று கொண்டு காட்சி அளிக்கின்ருர். இதன் வரலாறு வருமாறு.

சிவநிந்தை செய்யும் ஒரு திருமால் பக்தர் இக்கோயிலுக்கு வந்து சிவலிங்கம் இருப்பதை அறிந்து வழிபடாமல் திரும்பிச் சென்ருர். அப்பொழுது எதிரில் வந்த அன்பர் பெருமாளைக் காட்டுகின்றேன் வா என்று அழைத்து வந்து சிவலிங்கத்தில் மறைந்து பிரசன்ன வெங்கடேசுவரர் ஆகக் காட்சி கொடுத்தார்.

தன்னைத் தூஷித்தவனுக்கும் அவன் விரும்பும் பெருமாளும் தானே என்று காட்சி கொடுத்த ஈஸ்வரன் ஆகையால் தூஷணீஸ் வரர் என்று பெயர் பெற்ருர். இந்த ஊரில் இதுவன்றியும் ஐந்து சிவாலயங்களிலிருந்து 4 அழிந்து விட்டன. வாலீஸ்வரர் ஆலயம் ஏன்ற சிறிய சிவாலயம் மட்டும் நல்ல நிலையில் உள்ளது.

### காப்புத் திருத்தாண்டகம்.

தெண்ணீர்ப் புனற் கெடில் வீரட்டமும்
சீர்காழி வல்லந் திருவேட்டியும்
உண்ணீரார் ஏடகமும் ஊறல் அம்பர்
உறையூர் நறையூர் அரண நல்லூர்
விண்ணுர் விடையான் விளமர் வெண்ணி
மீயச்சூர் வீழிமிழலை மிக்க
கண்ணுர் நுதலார் கரபுரமுங்
காபாலியாரவர் அவர்தங் காப்புக்களே.

''கரபுரம் உடைய நாயனுர்'' என்பது கல்வெட்டு.

**5. திருவேட்டி 6. 7. 7. அப்பர்.**

சென்னையைச் சேர்ந்த திருவேட்டீஸ்வரன் பேட்டை ஆகும்.

நல்லநிலையில் திருப்பணி செய்யப்பட்டு சிறப்பாக வழிபாடு முதலியன நடைபெற்று வருகின்றது. இராசகோபுரம் உள்ளது. கல் திருப்பணி. நடுத்தரக்கோயில். சந்தான ஆச்சாரியர்களுக்கும் திருவுருவங்கள் உள்ளன.

**6. கச்சிமயானம்** அ. 6. 97. 10.

இத்தலம் காஞ்சியில் ஏகாம்பரேஸ்வரர் பெரிய திருக்கோயில் கொடி மரத்திற்கு அருகில் உள்ள தனி ஆலயம்.

இத்தலத்தை அப்பர் பெருமான் பொதுத் திருதாண்டகத்தில் பத்தாவது பாடலில் குறிப்பிடும் அரிய திருத்தலமாகும்.

மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்
ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன்
ஒரூரன் அல்லன் ஒர்வுவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவன் அருளே கண்ணாகக்காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக் நாட்டொணாதே.
(அப்பர்)

**7. கழுநீர்க்குன்றம்:** 6. 13. 4. அ.

திருத்தணிகைமலை

செங்கழுநீர் வரை அரையன் என்பது சுவாமி பெயர். இதைச் செங்கல் வராயன் என்று வழங்குகின்றனர். செங்கழு நீர் மலர் மலரும் சுனையுடையமலை என்பது இதன் பொருள். செங்கழு நீர்ச்சுனை இன்னும் உள்ளது செங்கழுநீர் மலர் இன்னும் எடுத்து சுவாமிக்கு வைக்கப்படுகின்றது. யாரும் அறியும் பிரசித்தமானதலம்

அப்பர்.

பன்மலிந்த வெண்டலை கையிலேந்திப்
பனிமுகில் போல் மேனிப் பவந்த நாதர்
நென்மலிந்த நெய்த் தானஞ் சோற்றுத்துறை
நியமந் துருத்தியும் நீடுர் பாச்சில்
கன்மலிந் தோங்கு கழுநீர்க்குன்றங்
கடனாகைக் காரோணங் கைவிட்டிந்நாள்
பொன் மலிந்த கோதையருந்தாமு மெல்லாம்
புறம் பயம் நம்மூரென்று போயினாரே.

8. காம்பீலி அ. 6. 70. 2.

இப்பொழுது கம்பீலி என்று வருங்குகின்றது. பெல்லாரி மாவட்டத்தில் ஹம்பி என்று வழங்கும் அழிந்த விஜய நகரசாம்ராஜ் யம் உள்ள பகுதியில் 'ஹோஸ்பெட்' என்ற புகை நிலையத்திலிருந்து சுமார் 20 மைல் தூரத்தில் உள்ளது. துங்க பத்திரை ஆற்றின் கரையில் உள்ள வளமான பெரிய ஊர். பழமையான பல சிவாலயங்கள் உள்ளன.

(பாடல் சோழநாட்டுத்தலம் 69வது பேராவூர் தலத்தில் பக்கம் 37ல் காண்க)

9. காரிக்கரை. சு. 7. 31. 3.

திருக்காரிக்கரை எனச் சேக்கிழார் குறித்துள்ளார். இது நாகலாபுரத்திலுள்ள ராமகிரி என்ற ஊராகும். காரி (காவேரி) நதியின் கரையில் உள்ளதால் இப்பெயர் பெற்றது போலும். M S M ரயில் பாதையில் அரக்கோணம் ரேணுகுண்டா வழியில் புத்தூர் என்ற நிலையத்தில் இறங்கி அங்கு நின்றும் ஊத்தூர் கோட்டை செல்லும் வண்டிப்பாதையில் 5 மைல் தூரத்தில் ஆரணிய நதியைத் தாண்டி அதன் வடகரையில் உள்ளது.

திருவாலங்காட்டிலிருந்து திருக்காளத்தி செல்லும் பெரும் பாதையில் உள்ளது. சம்பந்தர், அப்பர், இருபெரும் மக்களும் இத் தலத்தை வழிபட்டுப் பாடிச்சென்றனர் என்று பெரிய புராணம் கூறும் பதிகம் கிடைக்கவில்லை. பெரிய சிவாலயம். பைரவர் சந்நதி சிறப்பு. நாய் வாகனம் ஏராளமாகச் செய்து வைத்துள்ளார்கள். அருகில் திருக்குளம் உள்ளது.

திருஇடையாற்றுத்தொகை.

சுந்தரர்

கடங்களூர் திருக்காரிக்கரை கயிலாயம்
விடங்களூர் திருவெண்ணி அண்ணாமலைவெய்ய
படங்களூர் கின்ற பாம்பரையான் பரஞ்சோதி
இடங்கொள் ஊர்எய்தமான் இடையாறு இடைமருதே.

10. குக்குடேச்சுரம். 6. 71. 8.

சித்தூர் மாவட்டத்தில் புங்கனூரில் உள்ள சிவாலயம் என்று கல்வெட்டில் குறிக்கப்பட்டிருத்தலால் அதுவே குக்குடேச்சுரம் என்பர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்

(பாடல் சோழ நாடு ஆடகேச்சுரம் 8ம் தல வரலாற்றில் பக்கம் 5ல் காண்க)

**11. திண்டீச்சுரம்:** அ. 6. 7. 8; 6. 70. 9.

இறைவன் திண்டீச்சுரம் உடையார்.

இத்தலம் திண்டிவனம் என்று வழங்குகின்றது. பெரிய ஊர். ரயில்வே வசதியும், பஸ் வசதியும் உண்டு. கடலூர், பாண்டிச்சேரி வழியாக திண்டிவனம் பஸ் மூலம் செல்லலாம். நல்ல வழி.

திண்டி = புளியமரம்; திண்டிவனத்திடையே எழுந்த சுரம் திண்டீச்சுரம்.

தலவிருக்ஷம் புளியமரம் அண்மையில் எங்கும் புளியமரம் உள்ளது.

புளியமரத்திற்கு வடமொழியில் ''திந்திரிணி'' என்பதாகும். அதனால் வடமொழியில் திந்த்திருணி ஈஸ்வரன் சுவாமி என்று கூறுகின்றனர். பெரிய சிவாலயம். திருப்பணி தொடங்கி பாதியில் நின்று போய் உள்ளது. இராசகோபுரம் உள்ளது. கட்டும் போதே யாதோ குழப்பத்தால் பூச்சு வேலை இல்லாமல் நின்று போயுள்ளது. துர்க்கை சந்நதி சிறப்பு. ராகு காலத்தில் போற்றுகின்றனர். பாடல் சோழநாடு 8ம் தலவரலாறு ஆடகேச்சுரத்தில் பக்கம் 5ல் காண்க)

**12. திருத்தெள்ளாறு.** அ. 6. 71. 10.

வரலாற்றுச் சிறப்புள்ள ஊர். பெரிய ஊர். பல்லவர்கள் போர் இங்கு பல நடந்துள்ளன. பெரிய நகரமாயினும் போரினால் சிதைந்துள்ளன. ஒரு ஊரில் உள்ள சிவாலயம் நல்ல நிலையிலுள்ளது இந்து சமயம் மன்றத்தார் கண்காணித்து வருகின்றனர்.

திண்டிவனத்திலிருந்து வந்தவாசி வந்து திருத்தெள்ளாறு வந்து சேரலாம். வந்தவாசியிலிருந்து ஐந்து மைலில் உள்ளது திருத்தெள்ளாறு.

அப்பர்.

நள்ளாறும் பழையாறும் கோட்டாற்றேடு
நலந்திகழும் நாலாறும் திருவையாறும்
தெள்ளாறும் வளைகுளமுந் தளிக்குளமுந்நல்
இடைக்குளமும் திருக்குளத்தோடு அஞ்சைக்களம்
விள்ளாத நெடுங்களம் வேட்களம் நெல்லிக்கா
கோலக்கா ஆனைக்கா வியன் கோடிகா
கள்ளார்ந்த கொன்றையான் நின்ற ஆறும்
குளம்களம்கா எனஅனைத்தும் கூறுவோமே.

**13. புரிசைநாட்டுப்புரிசை சு. 7. 12. 6.**

வந்தவாசியிலிருந்து 5 மைல் செய்யாற்றிலிருந்தும் 5 மைல். நல்ல பாதை. பஸ் வசதி உண்டு. திண்டிவனம் வந்தவாசி வழியாகச் செல்லாம்.

புரிசை நாட்டின் தலைநகர் புரிசை

புரிசைக் கிழாரும், சு. முருகேச முதலியாரும் வாழ்ந்தபதி. பெரிய கிராமம். பலகோவில்கள் உள்ளன. பஸ்சைவிட்டு இறங்கி ½ மைல் ஊருக்குள் சென்றல் சிவாலயத்தை அடையலாம். நடுத்தர ஆலயம். திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

தனிச்சிறப்பு: 63வர் வரலாறு கருவறையைச் சுற்றி வரலாற்றுச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இந்தச் சிற்பங்களின் மூலம் பல சிக்கல்கள் தீரும். பொய்யடிமை இல்லாத புலவர் ஒருவரா பலரா என்று அறியலாம். பலர் என்றே சிற்பம் பகிர்கின்றது.

தென்னூர் கைம்மைத் திருச்சுழியல் திருக்கானப்பேர்
பன்னூர்புக் குறையும் பரமர்க்குஇடம் பாய்நலம்
என்னூர் எங்கள் பிரான் உறையுந் திருத்தேவனூர்
பொன்னூர் நாட்டுப் பொன்னூர் புரிசைநாட்டுப் புரிசையே.

**14. வளைக்குளம் அ. 6. 50. 8.**

வளர்புரமென்று வழங்குகின்றது. இத்தலத்தை அப்பர் 3 இடத்திலும் சம்பந்தர் 3 இடத்திலும் குறிப்பிட்டுள்ளார்கள். இத் தலம் காஞ்சீபுரத்திலிருந்து 28 மைலில் உள்ளது. நல்ல கற்பாதை நேர் பஸ் வசதி உண்டு. பெரிய ஆலயம். கோயில் கல் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. அரக்கோணத்திலிருந்து காஞ்சீபுரம் பாதையில் 7 மைல் வந்து பிறகு வடக்குப்புறம் திரும்பி 3 மைல் செல்லவேண்டும்

கோயிலருகே குளம் உள்ளது. ஏரியிலிருந்து தண்ணீர் குளத்திற்கு வந்து நிரம்பி வயலுக்குப் பாய்கின்றது (வளை=சங்கு) சங்கு தீர்த்தம் போல் வளைக்குளமென்று குளத்திற்கு வந்து இப்பெயர் ஊருக்கு வளைக்குளம் என்று வந்தது போலும். ஊர்ப் பெயர் வளர்புரம் என்று மருவிற்று போலும். இரண்டு கால பூசை நடக்கின்றது. கோயிலுக்கு வருவாய் போதாது. ஊர் பெரிய கிராமம். செங்குந்த மரபினர்மிகுதியாக வசிக்கின்றனர்.

அப்பர்

வானவர்கோன் தோளிறுத்த மைந்தன் தன்னை
வளைகுளமும் மறைக்காடும் மன்னினானை
ஊனவனை உயிரவனையொரு நாட் பார்த்தன்
உயர்தவத்தின் நிலையறியல் உற்றுச்சென்ற
கானவனைக் கயிலாயம் மேவினானைக்
கங்கைசேர் சடையானைக் கலந்தார்க்கு என்றும்
தேனவனைத் திருவீழி மிழலையானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே.



# நடு நாட்டு வைப்புத்தலங்கள்.

1. கண்ணை அ. 6. 70. 6.

2 சித்தவடம் 4. 2. 3. அ.

3. மாறன்பாடி 2. 39. 3.

1. கண்ணை அ. 6. 70. 6.

செங்கண்மா என்பதன் மருவு. இப்பொழுது செங்கம் என்று வழங்குகின்றது.

சேலம், அரூர், திருவண்ணமலை வழியில் செங்கம் உள்ளது. இத்தலம் தர்மபுரி மாவட்டத்தில், செங்கம் தாலூக்காவின் தலைநகர் கல்திருப்பணி நல்லநிலை. பெரிய ஊர் பெரிய கோயில்.

(பாடல் சோழநாட்டுத்தலம் 79வது விளத் தொட்டில் பக்கம் 41ல் காண்க)

2. சித்தவடம் அ. 4. 2. 3.

பாடல் பெற்ற திருவதிகைத் தலத்தின் புறத்தில் உள்ளது. இங்குள்ள திருமடத்தில் சுந்தரர் துயிலும் போது சிவபெருமான் அவர் முடியில் திருவடி சூட்டினார் என்பது வரலாறு. இது இப்பொழுது ஒரு நடுத்தரச் சிவாலயமாக இருக்கின்றது. கவனிப்பும், வருவாயும் இல்லாத அவலநிலை.

திருவதிகை வீரட்டானம் அப்பர்.

ஒத்த வடத்திள நாகம் உருத்திபட்ட மிரண்டும்
முத்து வடக்கண்டிகையும் முளைத்தெழு மூவிலைவேலும்
சித்தவடமும் அதிகைச் சேலுயர் வீரட்டஞ் சூழ்ந்து
தத்துங்கெடிலப் புனலும் உடையார் ஒருவர்தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை.

பெரிய புராணம்

''உடைய அரசுஉல கேத்தும் உழவாரப் படையாளி
விடையவர்க்குக்கைத் தொண்டு விரும்பு பெரும் பதியைமிதித்து
அடையுமதற்கு அஞ்சுவன்''என்று அந்நகரில் புகுதாதே
மடைவளர் தண்புறம்பணையிற் சித்தவட மடம் புகுந்தார்.

### 3. மாறன்பாடி 2. 39. 3.

பெண்ணுகடத்திலிருந்து திருநெல்வாயில் அரத்துறை என்னும் தலத்திற்கு இடையில் இத்தலம் உள்ளது. இறையூர் என்று வழங்குகின்றது. கிராமம் பழமையானது. சிறிய சிவாலயம் உள்ளது. திருஞான சம்பந்தர் நெல்வாயில் அரத்துறை செல்லும் வழியில் இரவு இத்தலத்தில் தங்கினுர் என்று பெரிய புராணம் கூறும்.

சம்பந்தர் 2. 39. 3ல் குறிப்பிட்டபடி நான்கில் இதுவும் ஒன்று என்பர் செங்கல்வராயபிள்ளே.

அட்டானம் என்ருேதிய நாலி ரண்டும்
அழகன் உறை காவனேத்துந் துறைகள்
எட்டாந்திரு மூர்த்தியின் காடொன்பதுங்
குளம் மூன்றுங்களமஞ்சும் பாடிநான்கும்
மட்டார் குழலாள் மலேமங்கை பங்கன்
மதிக்குமிடம் ஆகிய பாழி மூன்றும்
சிட்டானவன் பாசூரென்றே விரும்பாய்
அரும்பாவங்கள் ஆயின தேய்ந்தறவே.





# வடநாட்டு வைப்புத் தலங்கள்.

1. குருக்கேத்திரம் சு. 7. 78. 6.
2. திரிபுராந்தகம் அ. 6. 7. 5.
3. நந்திகேச்சுரம அ. 6. 71. 6
4 மாகாளம் அ. 6. 51. 7. / 7. 47. 5
5. வாரணாசி (காசி) அ. 2. 39. 7. / 6. 70. 6.
6. விவீச்சுரம் அ. 6. 70. 8.



1. குருக்கேத்திரம் சு. 7. 78. 6.

குருக்ஷேத்திரம் வடநாட்டில் உள்ளதும், பாண்டவர், துரியோதனாதியர் போரிட்டுத் தர்மர் வெற்றி பெற்ற புண்ணிய பூமி ஆகும். குருக்ஷேத்திரம் திரிந்து குருக்கேத்திரம் என்று வந்துள்ளது டில்லியிலிருந்து 5 மணி அளவு புகை வண்டித் தொடரில் பயணம் செய்து குருக்ஷேத்திரப் புகை வண்டி நிலையத்தை அடையத்தக்கது. இங்கு தீர்த்த விசேடம் உள்ளது. பல மைல் பரப்பளவு பரந்த வெளியாக உள்ளது. பெரும்பகுதி விவசாய நிலமாக இருக்கின்றது இங்கு சூரிய குண்டம், பீமகுண்டம் என்ற இரண்டு நீர் நிலைகள் ஏரி போல் இருக்கின்றன. இந்தநீர் விவசாயத்திற்கும் பயன்படுகின்றது

சூரிய குண்டம் என்னும் நீர்நிலையின் மத்தியில் ''சோதீஸ்வரம்'' என்னும் குந்தி வழிபட்ட சிவாலயம் உள்ளது. கருவறையில் சிவலிங்கத்திற்கு பின்பு குந்தி தேவியின் திருவுருவம் உள்ளது. கீதையைக் கண்ணபிரான் அருச்சுனனுக்கு உபதேசித்த இடத்தில் பெரிய ஆலமரம் உள்ளது. இதன் அடியில் பளிங்கினால் கண்ணன் அருச்சுனனுக்கு உபதேசித்த காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது. இதன் அன்றியும் கண்ணபிரானுக்குப் பல ஆலயங்கள் உள்ளன, பாணகங்கா என்ற இடத்தில் அருச்சுனன் பாணத்தினால் உண்டாக்கிய தீர்த்தக் கிணரும், அதன் அருகில் பீஷ்மர் அம்புப் படுக்கையில் இருக்கும் பெரிய திருவுருவமும் ஒரு அறையில் உள்ளது.

சுந்தரர். திருக்கேதாரம்

தளிச் சாலைகள் தவமாவது தம்மைப் பெறில் அன்றே
குளியீர்உளங் ''குருக்கேத்திரங்'' கோதாவிரிகுமரி
தெளியீருளஞ் சீர்பர்ப்பதந் தெற்கு வடக்காகக்
கிளிவாழை ஒண்கனி கீறியுண் கேதார மெனீரே.

2. திரிபுராந்தகம் அ. 6. 7. 5.

தெலுங்கு நாட்டில் கர்னூல் மாவட்டத்தில் உள்ளது
பாடல் பாண்டிய நாட்டுத்தலம் 9 தேளீச்சுரத்தில் பக்கம் 47ல் காண்க

ஆந்திர நாட்டில் சிம்மாசலம் என்ற மலையின்மீது திரிபுராந்-தேஸ்வரர் என்ற சிவாலயம் உள்ளது. அப்பர் கூறும் திரிபுராந்தகம் என்னும் தலம் இதுவாக இருக்கலாம.

3. நந்திகேச்சுரம் அ. 6. 71. 8.

மைசூர் நாட்டில் உள்ள நந்தீச்சுரம் என்பர் ரா. பி. சே.

செங்கர்பட்டு மாவட்டத்திலுள்ள கூடுவாஞ்சேரி நிலையத்திற்கு அருகில் உள்ள 'நந்திவரம்' என்பர் செங்கல்வராயபிள்ளை. பழையாறையிலுள்ள 'நந்திவனம்' என்பர், தி.வை.சதாசிவபண்டாரத்தார் மைசூர் நாட்டில் நந்திமலை மீதும் அதன் அடிவாரத்திலும் பழமையான சிவாலயங்கள் உள்ளன. மைசூர் நாட்டில் உள்ள வீரசைவ மரபினர் திருநந்திதேவருக்கே ஏற்றம் கொடுப்பவர். ஆகையால் நந்தி மலையிலுள்ள சிவாலயமே 'நந்தீச்சுரம்' ஆகலாம்.

(பாடல் சோழநாடு 8ம் தல வரலாறு ஆடகேச்சுரத்தில் பக்கம் 5ல் காண்க)

4. மாகாளம். அ. 6. 51. 7. / 7. 47. 5.

இறைவன் பெயர் : மகாகாளர்

உஞ்சேனை மாகாளம் என்னும் இத்தலம் வட நாட்டில் மத்திய பிரதேசத்தில் உள்ளது.

உஜ்ஜயினி என்பது ஊர் பெயர். மாகாளம் கோயில் பெயர்.

பெரிய சிவாலயம். மகாகாளர் பெரிய மூர்த்தி பாதாள அறையில் வைத்துப் பூஜிக்கின்றனர். யாவரும் நீரிட்டு பூவிட்டு வழிபடலாம்.

கோயிலோரத்தில் ஜிப்ரா நதி ஒடுகின்றது. விக்கிர மாதித்தன் பூஜித்த ஹிரசித்திமாதா என்னும் காளிகோயில் பிரபலமகக உள்ளது

மறைக்காட்டார் வலிவலத்தார் வாய்மூர் மேயார்
வாழ் கொளிபுத் தூரார் மாகாளத்தார்
கறைக் காட்டுங்கண்டனுர் காபாலியார்
கற்குடியார் விற்குடியார் கானப்பேரார்
பறைக்காட்டுங் குழிவிழிகட்பல் பேய் சூழப்
பழையனூர் ஆலங்காட்டடிகள் பண்டோர்
மிறைக்காட்டுங் கொடுங்காலன் வீடப்பாய்ந்தார்
வீழி மிழலையே மேவினரே.

5. **வாரணசி.** (காசி) அ. 2. 39.7 / 6. 90. 6.

இறைவன் **விசுவநாதன் — விசாலாட்சி.**

இத்தலம் வடக்கே உத்தரப்பிரதேசத்தில் உள்ளது. காசி என்று பிரபலமாக விளங்குவது.

வாரண + ஆசி என்ற இரு நதிகளுக்கு இடையில் உள்ளதால் வாரணசி என்ற இப்பெயர் பெற்றது.

சிறிய சந்துக்குள் இக் கோயில் உள்ளது. சிறிய கோயில். விசுவநாதர் வெள்ளித் தொட்டியின் மத்தியில் விளங்குகின்றார். குறித்த காலம் தவிர மற்ற நேரத்தில் யார் வேண்டுமானாலும் நீர் விட்டு பூஜிக்கலாம். நாட்டின் நாலுபக்கத்திலிருந்தும் இம்மூர்த்தியைத் தரிசிக்க வருகின்றனர். இந்த நாட்டில் பிறந்த ஒவ்வொரு இந்துவும் தன் வாழ் நாளில் ஒரு முறையேனும் கங்கையில் நீராடிக் காசி விசுவநாதனை வழிபட விரும்புவான். நாட்டின் மூலை முடுக்கு' களில் உள்ளவர்களெல்லாம் அறிந்ததலம்.

பாடல்: சோழநாடு 71-வது தலம் மந்தாரத்தில் காண்க. பக்கம் 37

6. **விவீச்சுரம்.** அ. 6. 70. 8

கோதாவரி மாவட்டத்தில் இராஜ முந்திரி என்ற புகை வண்டி நிலையத்திலிருந்லு 10 மைல் அளவில் உள்ளது 'பீமீச்சுரம்-ஆலயம் என்றும் பீமீச்சுரம் என்ற பெயரே விவீச்சுரம் என்று திரிந்து இருத்தல் கூடும் என்றும், இவ்வூரின் பெயர் இடர்க்கரம்பை என்று கல்வெட்டிற் குறிக்கப்பட்ட தென்றும் கூறுவர் ரா. பி. சேதுப்பிள்ளை

தெலுங்கு நாட்டில் மூன்று பிரபலமான சிவலிங்கங்கள் உள்ளன என்றும், திரிலிங்கதேசம் என்பதே தெலுங்கு தேசம் என்று அந்த நாட்டிற்குப் பெயர் வந்ததென்பர். மூன்று லிங்கங்கள் மல்லிகார்ச் சுனம் என்னும் ஸ்ரீசைலம் மற்றொன்று கரீம் நகருக்கு அருகில் உள்ள வேம் முள வாடா மூன்றாவது ''திராஷாராமம்'' என்னும் இத்தலம் என்பர்.

பாடல்: சோழநாட்டுத்தலம் (22) கஞ்சாற்றில் காண்க. பக்கம் 12

# வைப்புத்தலங்களின் முதற்குறிப்பகராதி

| வைப்புத்தலங்கள் | பக்க எண் |
|---|---|
| தண்டந்தோட்டம் | 27 |
| தலைத்துறை | 27 |
| தளிச்சாத்தங்குடி | 28 |
| தஞ்சாக்கை | 46 |
| தகடூர் | 57 |
| திங்களூர் | 29 |
| திண்டீச்சுரம் | 29 |
| திருவாதிரையான் பட்டினம் | 30 |
| திருச்செங்குன்றூர் | 63 |
| திருக்குணவாயில் | 64 |
| திருத்தெள்ளாது | 70 |
| திண்டீச்சுரம் | 71 |
| திருவேட்டி | 72 |
| திரிபுராந்தகம் | 78 |
| துடையூர் | 31 |
| தென்களக்குடி | 47 |
| தேனூர் | 31 |
| தேவீச்சுரம் | 47 |
| தோழூர் | 55 |
| நல்லக்குடி | 31 |
| நல்லாற்றூர் | 39 |
| நந்திகேச்சுரம் | 79 |
| நாகளேச்சுரம் | 32 |
| நாங்கூர் | 32 |
| நியமம் | 33 |
| நெய்தல் வாயில் | 33 |
| நெற்குன்றம் | 33 |
| பஞ்சாக்கை | 34 |
| பட்டமங்கை | 50 |

| வைப்புத்தலங்கள் | பக்க எண் |
|---|---|
| பரப்பள்ளி | 58 |
| பாற்குளம் | 34 |
| பிடவூர் | 34 |
| பிரம்பில் | 36 |
| புலிவலம் | 36 |
| புரிசை நாட்டுப் புரிசை | 71 |
| பூந்துறை | 58 |
| பெருந்துறை | 48 |
| பேராவூர் | 37 |
| பொதியன்மலை-பாபநாசம் | 48 |
| மணற்கால் | 37 |
| மந்தாரம் | 37 |
| மாந்துறை | 38 |
| மாட்டூர் | 59 |
| மாறன்பாடி | 76 |
| மாகாளம் | 76 |
| மிழலை நாட்டு மிழலை | 51 |
| முழையூர் | 39 |
| மூவலூர் | 38 |
| மொக்கணீச்சுரம் | 60 |
| வரிஞ்சை | 39 |
| வழுவூர் | 39 |
| வணிக்குளம் | 72 |
| வாதவூர் | 49 |
| வாரணாசி | 80 |
| விவீச்சுரம் | 80 |
| விளத்தொட்டி | 41 |
| வெற்றியூர் | 51 |

அச்சிட்டோர் :
ரவிபிரகாஷ் பிரிண்டர்ஸ், ஈரோடு-4.

